ஸ்ரீ பரப் பிரம்மனே நம :

# ஸ்ரீ விதுரர் அருளிய நீதிமொழிகள்

(இரண்டாம் பாகம்)

தத் துவ மஸி
கம் பிரம்மாஸ்மி



பிரக்ஞானம் பிரம்மம்
இயமாத்மா பிரம்மம்



இஃது கொமாரபாளையம், J. K. K. முனிராஜா அவர்களின் தாயார் J. K. K சம்பூரணி அம்மாள் அவர்களின் 10-வது ஆண்டு குருபூஜை விழாவில் கோவிலூர் மரபு தவத்திரு-*சோம. சோமசுந்தரசுவாமி* அவர்களின் விருப்பப்படி (2-ம் பாகம்) இலவச வெளியீடாக வெளியிடப்பட்டது.

**ஆங்கீரஸ ஸு ஆனி மீ-1 ம் தேதி**

**15-6-1992, திங்கட்கிழமை**

## ஹிந்துக்களின் கடமைகள்.

### தினசரிக் கடமைகள்.

1. தினசரி சூரியன் உதிப்பதற்குமுன் எழவும்.
2. காலையில் எழும்போதும், குளித்தபின்னும் உணவு அருந்தும் முன்பும் அவரவர் இஷ்ட தெய்வத்தை வணங்கவும்.
3. நெற்றியில் ஹிந்து மதச் சின்னங்களுள் ஏதேனும் ஒன்றைக் (விபூதி, குங்குமம், சந்தனம், நாமம்) கட்டாயம் இட்டுக் கொள்ளவும் வெட்கப்படவேண்டாம். பெருமை கொள்ளவும்.
4. பூஜைக்கு என தனி இடமோ, தனி அறையோ ஒதுக்கி இஷ்ட தெய்வத்தின் திருவுருவிற்கு ஊதுவத்தியோ, கற்பூரமோ ஏற்றவும். அவ் அறையை சுத்தமாக வைத்துக்கொள்ளவும்.
5. எந்த நேரமும் இஷ்ட தெய்வத்தின் நாமத்தை மறவாமல் மனதில் உச்சரித்துக்கொண்டே இருக்கவும்.
6. தினசரி கொஞ்சம் நேரம் ஒதுக்கி நமது சமய நூல்களின் ஏதேனும் ஒன்றில் ஒரு சில பக்கங்களைப் படிக்கவும்.
7. நம்மிலும் நலிந்த நமது சகோதரர்கட்கு ஏதேனும் இயன்ற உதவிகளைத் தினசரி செய்யவும்.
8. வீட்டில் மாலையில் பூஜையறையில் அவசியம் அகல் : குத்து விளக்கேற்றி வைக்கவும்.
9. இரவு படுக்கப் போகும் முன் இஷ்ட தெய்வத்தைச் சற்று நேரம் தியானித்துவிட்டு உறங்கவும்.

### ஹிந்துக்களின் வாரக் கடமைகள்.

1. பிரதி வெள்ளியோ அல்லது விருப்பப்பட்ட நாளிலோ தவறாமல் குடும்பத்துடன் கோவிலுக்குச் சென்று வரவும்
2. வாரம் ஒருமுறை காலை அல்லது மாலை தனியாக 10 நிமிடம் தியானத்தில் அமரவும். (தியான முறைகளைத் தெரிந்து கொள்ளவும்).
3. அருகில் நடைபெறும் பஜனை, கதாகாலட்சேபம், ஆன்றோர் சொற்பொழிவுகட்குச் சென்று பயனடையவும்
4. ஹிந்து இயக்கங்கள் நடத்தும் நிகழ்ச்சிகளில் நண்பர்களுடன் கலந்து கொள்ளவும் முடிந்தால் சேவை செய்யலாம்.
5. அருகிலுள்ள மருத்துவமனை ஒன்றிற்குச் சென்று அங்குள்ள நோயாளிகட்காகப் பிரார்த்தனை செய்வதோடு, அவர்கட்டுத் திருக்கோவில் பிரசாதம் வழங்கி ஆறுதல் கூறவும்.



**அன்னை J. K. K. சம்பூரணி அம்மாள்**

தோற்றம் : 1917 பூர்ணம் 5-7-1982

உ

சிவ மயம்

# அணிந்துரை

அங்கு இங்கு எனாதபடி எங்கும் ப்ரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளோடு நிற்கும். என ஸ்ரீ தாயுமானவர் வாக்குப்படி விளங்கிக் கொண்டிருக்கும் சச்சிதானந்தப் பரப்பிரம்மமே உள்ளது. வேறாக இரண்டாவது வஸ்து கிடையவே கிடையாது எனக் கூறுவது தான் ஏகம் ஏவாத்வைதம் என்பது. அஃதாவது, ஒன்றே இரண்டல்ல என்பதாம். இது தான் நமது இந்து மதத்தின் முடிந்த முடிவு ஆகும். அப்படி எனில், நாநாவாகக் காணப்படுவது ஏன் என்றால் சுருக்கமாகக் கூறுதும்.

எங்கிருந்தோ எப்படியிருந்ததோ என்று கூற முடியாததும், ஒன்பது விதத்தினாலும், ஆராய்ந்து பார்த்தும் பிடிபடாமல் இன்னதென்று கூற முடியாததும், ஆனால் தோற்றா மாத்திர மானதும், இப்பிரபஞ்சத்திற்குக் காரணமாகவும் உள்ள அனிர்வ சனிய மாயை என்னும் மித்தியா வஸ்து, மேலே சொல்லப்பட்ட பரப்பிரம்மத்தில் நிழல் போல, கானற்சலம் போல, பழுதையிற் பாம்பு போல, கனவுக் காட்சிகள் போல, சினிமாத் திரையின் காட்சி போல ஒட்டுதல் இல்லாமல் இடமாகக் கொண்டு உள்ளது.

இப்படிப்பட்ட மாயையின் மூன்றாம் குணமான தமசின் பரிணாமமாக விளங்குவது ஈறேழு பதினான்கு லோகங் களாகும்., மேற்படி மாயையின் இரண்டாவது குணமான ரஜசு அநேகமாகப் பிரிந்துள்ள காரணத்தால் சீவர்

களுக்குக் காரண சரீரங்களாகி சூட்சம சரீரங்களின் மூலம் ஏழு வகைப் பிரப்புக்களாக விவகரிக்கின்றன. இவைகளே 84 – இலட்சம் ஜீவ வேதங்களாய் மேற்படி லோகங்களின் புண்ணிய பாப மிசிர கருமங்களுக்கீடாக, சுகம், துக்கம், சுகதுக்கக் கலப்பு ஆகியவைகளை அனுபவித்துக் கொண்டு இருக்கின்றன. மேற்படி மாயையின் முதற் குணமான சத்தவம். பிரிவுபடாமல் வியாபகமாக உள்ள காரணத்தால் ஈசுவரனுக்குக் காரண சரிரமாகி தன்னுடைய காரிய சரீரங்களாகிய பிரம்மா விஷ்ணு, சிவன் ஆகியவர்களின் மூலமாகப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்கள் செய்யப்படுகிறதற்கு ஏதுவாய் உள்ளது.

காந்தத்தின் முன் இரும்புகள் சேட்டிப்பது போல மேற்படி பரப்பிரம்மத்தின் முன் மேலே கூறிய சடமான மாயையின் மூன்று குணங்களும் செயல்படுகின்றன. ஒரு பெரிய தடாகத்தின் நீரில், சூரியப் பிரதி பிம்பம் ஒன்றாக இருப்பினும், அதில் உண்டான நீர்க் குமிழிகள் அநேகம் இருக்கின்றன. தனித்தனியே அவற்றில் பிரதி பிம்பம் தோற்றுவது போல், சூரியனைப் போல ஒரே பரப்பிரம்மம் மாயையின் சத்துவத்தில் பிரதிபிம்பித்து ஈசுவரனாகவும் தோற்றுகிறது. மாயையின் இரஜகில் குமிழிகள் போல பிரதிவிம்பித்து அநேக சிவர்களாகவும் தோற்றுகிறது. ஆகவே, சூரியப் பிரதி பிம்பங்கள் சூரியனுக்கு அன்னிய மில்லாதது போல ஒரே பரம்பிரம்த்துக்கு அன்னியமாகச் சீவ ஈசுவர்கள் இல்லை என்பது பெறப்படுகிறது. மாயை, மாயா காரியங்களான இவைகள் மேலே சொல்லப்பட்ட தோற்றா மாத்திரம் என்றே சித்திக்கிறது. சித்திக்கவே, முதலில் சொல்லப்பட்ட ஒன்றே இரண்டல்ல என்பது முடிவாம். இப்படிச் சற்குரு சற்சாத்திரங்களைக் கொண்ட யுக்திகள் அனுபவங்கள் மூலமாக விசாரித்து தெளிந்து திடமாக சந்தேக விபரீதமின்றி இருப்பவன் எவனோ

அவனே சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி அடைந்த சீவன் முத்தன். இந்த நிலையையே கிடைத்தற் கரிய மனித சரீரம் படைத்த சீவர்கள் முயற்சி செய்து அடையத்தக்கது.

இதற்கு நமது மனதைச் சுத்தப்படுத்தப்பட வேண்டும். அதற்குக் கொலை, களவு, சூது, கள், காமம் எனப்படும் பஞ்சமா பாதகங் களில் ஈடுபடுத்தும் அநீதி மொழிகளில் இருந்து விடுபட மேன்மக்களது நீதி மொழிகளைப் படித்துக் கேட்டச் சிந்தித்துத் தெளிந்து செயல்பட தீவிர முயற்சி செய்தாலன்றி மனம் செம்மை அடையாதென்பது எல்லோரும் அறிந்ததே.

ஆகவே அத்தகைய நீதி மொழிகளில் நமது தமிழகத்தில் திருக்குறள், நாலடியார், போன்ற நீதி நூல்கள் பிரசித்தி பெற்றன போல மகாபாரதத்திலே ஸ்ரீ விதுரர், திருதராட்டிரனுக்குக் கூறிய நீதி மொழிகள் அமைந்துள்ளன.

"இழுக்கல் உடையுழி ஊற்றுக் கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்"

என்ற திருக்குறளின் படி மேற்படி ஸ்ரீ விதுரர் மிக ஒழுக்கமும், நேர்மையும் உடைய ஓர் அதிகாரி புருஷர் ஆவார். அவர் அநேக இடங்களில் தமக்கு மூத்தவர், சக்கரவர்த்தி என்றும் பாராமல் திருதராட்டிரனுக்கு 'நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென்று இடித்தற் பொருட்டு'' என்னும் திருக்குறளின்படி அஞ்சாது எடுத்துரைத்துத் திருத்தும் முறைமை மிகவும் அழகும் போற்றற்குரியதுமாகும்.

இத்தகைய நீதிமொழிகள் திருதராட்டிரனுக்குக்

கூறியதன் மூலம் நம் போன்ற அறிவிலிகள் திருந்தும் பொருட்டே என்பதை நாம் உணர்ந்து உய்ய வேண்டுமென்பதே ஸ்ரீ மகாபாரதம் பாடிய ஸ்ரீவேத வியாசர் கருத்தாகும். ஆகவே, இப்படிப்பட்ட உயர்ந்த நீதி மொழிகள் மக்களுக்கு பயன்படும் என இறையருள் எம் உள்ளத்தில் உணர்த்திய வண்ணம், ஆனந்தாஸ்ரமம் மதலாவது தலைவர் ஸ்ரீ நாராயண சரஸ்வதி சுவாமிகளின் 12-வது குருபூஜை (29.5.92) விழாவில் முதல் பாகமாக மேற்படி ஆஸ்ரமத்தின் 2-வது தலைவர் திருவாளர் V.B.S.இராமசாமி செட்டியார் அவர்களால் இலவசமாக வெளியிடப்பட்டது.

இப்போது குருபக்தி இரத்தினம் உயர் திருவாளர் J.K.K.முனிராஜா அவர்கள் தமது தாயார் சம்பூரணி அம்மாளின் 10-வது குருபூஜை (15.6.92) விழாவில் 2-ம் பாகத்தை இலவசமாக வெளியிட்டு நிறைவு செய்துள்ளார்கள். எனவே, இந்த "ஸ்ரீ விதுரர் அருளிய நீதி மொழிகளை"த் திரும்பத் திரும்பப் படித்து மனதில் தாரணை செய்து கொண்டால், வாழ்க்கையில் வழுக்கும் இடந்தோறும் ஊற்றுக் கோலாக உதவு புரியும் எனக் கூறி இந்த 2- பாகங்களையும் வெளியிட்ட இரு பெரும் தருமாத்மாக்களுக்கும் நன்றியும், வணக்கமும், இறை அருளும் குருவருளும் நிறையப் பெற்றவர்களாய் நீடூழி வாழ வேண்டுமென வாழ்த்துக்களும் கூறிக் கொள் கின்றோம்.

மங்களம்

ஆனந்தாஸ்ரமம்
எடப்பாடிரோடு
குமாரபாளையம்
சேலம் மாவட்டம்

வேணும் ஸ்ரீ சற்குரு நாதன் துணை
சோம - கோபாலசுவாமி
6.6.92

உ

*சிவ மயம்*

# ஸ்ரீ விதுரர் அருளிய நீதி மொழிகள்

*குன்றி டாத் கொழுஞ்சுட ரேமணி*
*மன்று ளாடிய மாணிக்க மேயுனை*
*யன்றி யார்துணை யாருர வார்கதி*
*என்று நீயெனக் கின்னருள் செய்வதே*

அயனால் படைக்கப்பட்ட இவ்வுலகில், எந்நாட்டிலும் இல்லாத தனிச் சிறப்புக்கள் பலவுடைய நமது இந்திய நாட்டிலே, துவாபர யுகம் அந்தத்தில் சந்திர குல வமிசத்திலே, பாண்டு புத்திரர்களான பாண்டவர்களின் நாட்டைத் தீய வழியில் அபகரித்துக் கொண்ட திருதராட்டிர புத்திரன் துரியோதனன், நீதிக்கும், நேர்மைக்கும் புறம்பாகத் திருப்பித்தர முடியாது எனக் கூறி விட்டான். அதை ஆதரித்து மேற்படி திருதராட்டிரன் தனது மந்திரி சஞ்சயனைத் தூது அனுப்பி "எப்படியாவது அந்தப் பாண்டவர்களை மீண்டும் காட்டிற்குப் போக இதமாகக் கூறி வா" என்று அனுப்பினான். அவ்வாறே சென்ற சஞ்சயன் தனது எண்ணம் பலிக்கவில்லை என்று திரும்பி வந்து திருதராட்டிரனிடம் "வேந்தரே பாண்டவர்கள் எப்போதும் அறத்தின் நுட்பத்தை அறிந்து நடக்கின்றார்கள். அவர்களைப் பகைக்கின்றவர்கள் நெருப்பினால் எரிகின்ற பஞ்சுக் குவியலைப் போல் எரிந்து விடுவார்கள்" மிகுதி நாளை அரசவையில் கூறுவேன் எனக்

கூறிச் சென்றான். இதைக் கேட்ட திருதராட்டிரன் உறக்கம் இன்றித் தவித்தான். விதுரரை அழைத்து என் அருமைத் தம்பியே! என் மனம் நிலை கொள்ளாமல் அளவுக்கு மிஞ்சித் துக்கப்படுகின்றது. இப்போது மனச் சாந்திக்கான சுருதி யுக்தி அனுபவத்திற்கு ஒத்ததான மொழிகளைக் கூறுவாயாக! என்று (ஸ்ரீ வியாச பகவானால் அருளிச் செய்யப்பட்ட ஐந்தாவது வேதமெனப் புகழப்படும் ஸ்ரீ மகாபாரதத்தின் 5–வது உத்தியோக பருவத்தில்) கேட்டுக் கொண்டதற்கிணங்க ஸ்ரீ விதுரரால் அருளிச் செய்யப்பட்ட நீதி மொழிகள் (இரண்டாம் பாகம்) இவை பண்டிதர் முதல் பாமரர் வரைக்கும், அரசன் முதல் ஆண்டி வரைக்கும் பயன்படுவன ஆகும். அவை வருமாறு :

ஸ்ரீ விதுரர் கூறினார் :

இது தொடர்பாக அத்ரியின் புதல்வருக்கும் ஸாத்யர்கள் என்ற தேவர்களுக்கும் உரையாடல் வடிவாயுள்ள, முன்பு நடைபெற்ற கதையை நாம் கேட்டுள்ளோம். 1

ஸந்நியாசி ரூபத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த மேன்மையான அறிவு பெற்றவரும், தீவிரமான விரதங்கள் அனுஷ்டிக்கும் அத்ரியின் புதல்வனுமான மஹாிஷியை ஸாத்ய தேவர்கள் கேட்டனர். 2

ஸாத்ய தேவர்கள் கூறினர் :

மஹரிஷியே! நாங்கள் ஸாத்ய தேவர்கள். உங்களைப்

பார்த்து எங்களுக்கு நீங்கள் யார்? என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனாலும் உங்களுக்கு அறிவும், சாஸ்திர ஞானத்தினால் அடக்கமும் உள்ளது என்று எங்களுக்குத் தோன்றுகிறது. ஆதலால் தகுந்த, உயர்ந்த சொற்களுடன் எங்களுக்கு உபதேசம் செய்வது பொருந்தும். 3

**ஹம்ஸர் கூறினார் :**

**(ஸந்நியாசியாகியரிஷி கூறினார் : )**

தேவர்களே! துன்பத்தினால் அசையாமலித்தல், எல்லாப் புலன்களையும் அடக்குதல், பரம்பொருளை அடைய வைக்கும் தர்மங்களைச் செய்தல் என்பவை களுடன் உள்ளத்தின் எல்லா முடிச்சுகளையும் அவிழ்த்து விட்டு துன்பத்திலும் இன்பத்திலும் சமமாக இருக்க வேண்டும் என்று நான் கேள்விப்பட்டுள்ளேன். 4

ஒருவன் தன்னைப் பார்த்துக் கோபித்துக் கொண்டால் தான் கோபத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறிருத்தலால் அடக்கமுடையவன் கோபம் அடைந்த வனை நாசம் செய்கிறான். மேலும் அவனது புண்ணியத்தையும் தான் பெற்றுக் கொள்கிறான். 5

கோபம், பிறரைக் குறை கூறுதல், நண்பர்களுடன் பகைமை கொள்வது, கீழ்த்தரமானவர்களிடம் நட்பு வைத்துக் கொள்வது, அஹங்காரத்திற்கு இடம் கொடுப்பது, நீசமான செயலைச் செய்வது, கடூரமான

வார்த்தைகளால் பேசுவது போன்றவைகளை விட்டு விட வேண்டும். 6

கடூரமான வார்த்தைகள் மனிதர்களின் எலும்பு, இதயம் மட்டும் ப்ராணத்தையே எரியும்படிச் செய்கின்றன. ஆதலால் எப்பொழுதும் தர்மத்தை அனுஸரிப்பவன் கடுமையான மற்றும் கோபத்தினால் உண்டான வார்த்தைகளை விட்டு விட வேண்டும். 7

மனிதர்களிலேயே கீழ்த்தரமானவன் – எவன் கடூரம் மற்றும் கோபத்தினால் வரும் சொற்களைப் பேசி, சொற்களாகிய முட்களால் மற்றவர்களுக்குத் துன்பம் இழைக்கிறானோ அவன், அத்தகையவன் தன் நாவினில் நரகத்தையே கொண்டுள்ளான். அப்படிப்பட்டவன் மக்களுக்கு எப்போதும் துன்பம் தரக்கூடியவன். 8

கூர்மையாகவும், சூரியன் அல்லது அக்னியைப் போல் ஜ்வலித்தக் கொண்டிருப்பதாகவும் உள்ள பிறரது 'சொல்' என்ற அம்புகளால் பெரிய காயத்தை அடைந்து கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கும் அறிவாளியானவன் "துன்பம் தருபவனின் புண்ணியம் எனக்குச் சேரும்" என்று கூறி பொறுமையோடு இருக்க வேண்டும். 9

எவன் நல்லவனாகவோ, கீழ்த்தரமானவனாகவோ அல்லது தபஸ்வியாகவோ உள்ளவர்களுடன் தொடர்பு கொள்கிறானோ அவன், துணியைச் சாயத்தில் அமுக்கி எடுத்தால் எவ்வாறு அந்த சாயத்தின் வர்ணத்தைத் துணி பெற்றுக் கொள்கிறதோ அதேபோல அவர்களைப் போல்

ஆகி விடுவான். 10

எந்த மனிதன் பிறரது குறை சாற்றுதலிற்குப் பதிலாக ஒன்றும் கூறுவதில்லையோ, கூற வைக்கவும் செய்வ தில்லையோ, மற்றொருவனால் பாதிக்கப்பட்டாலும் அவனுக்குத் துன்பம் கொடுப்பதில்லையோ, கொடுக்க வைப்பதும் இல்லையோ, மேலும் பாவிக்குத் துன்பம் கொடுக்க மனதாலும் விரும்புவதில்லையோ அப்பேற்பட்ட வனது நட்பைத் தேவதைகளும் விரும்புகிறார்கள். 11

பேசுவதைக் காட்டிலும் மௌனம் உயர்ந்தது என்று சொல்லப் பட்டிருக்கிறது. பேச வேண்டியிருந்தாலும் உண்மையே பேச வேண்டும். உண்மை பேச வேண்டி யிருந்தால் எது பிரியமாக இருக்கிறதோ அதைப் பேச வேண்டும். பிரியமாகப் பேச வேண்டியிருந்தால் எது தர்மத்திற்கு உடன்பாடாக இருக்கிறதோ அதையே பேச வேண்டும். 12

யாருடன் ஒருவன் வசிக்கிறானோ, யாரை ஒருவன ஸேவிக்கிறானோ, யாரைப் போல் ஆக விரும்புகிறானோ அவ்வாறே ஒரு மனிதன் ஆகி விடுகின்றான். 13

எந்தப் பொருளிலிருந்து ஒருவன் தொடர்பை விட்டுவிடு கின்றானோ அதிலிருந்து அவன் விடுதலைப் பெறுகின் றான். எல்லாவற்றுடனிருந்தும் தொடர்பை அறுத்து விட் டால் ஒருவன் சிறிதளவும் துன்பத்தை அறிவதில்லை. 14

இத்தகைய மனிதன் மற்றவர்களால் வெல்லப்படுவது

மில்லை. அவர்களை இவன் வெல்வதுமில்லை. அவன் யாருக்கும் துன்பம் உண்டாக்குவதுமில்லை. யாரையும் எதிர்ப்பதுமில்லை. பாராட்டினாலோ குறை கேட்டாலோ அசைவதில்லை. அவன் துன்பமுறுவதுமில்லை. மகிழ்ச்சி யுறுவதுமில்லை. 15

எவன் எல்லோரது நலத்தையும் விரும்புகின்றானோ, பிறருக்குக் கஷ்டம் வர வேண்டும் என்று நினைப்பதில்லையோ, உண்மையைப் பேசுகின்றானோ, பணிவுடன் உள்ளானோ, மேலும் புலன்களை அடக்கி உள்ளானோ அத்தகையவன் உயர்ந்த மனிதன் என்று அழைக்கப்படுகின்றான். 16

எவன் பொய்யான சொற்களால் மற்றவர்களுக்கு ஆறுதல் கூறுவதில்லையோ, தனது சொற்படி தான மளிக்கின்றானோ, மற்றவனின் குற்றத்தை அறிந்துள் ளானோ அத்தகையவன் நடுத்தர மனிதனாவான். 17

எவன் மற்றவர்களால் தனக்கு ஏற்படும் நன்மை குறித்து திருப்தியற்று இருக்கின்றானோ, தன் விஷயத்திலேயே சந்தேகம் கொள்கிறானோ, நண்பர்களிடமிருந்து தன்னைப் பிரித்துக் கொள் கிறானோ அவன் கீழ்த்தரமானவன். 18

யாராலும் அடக்க முடியாமல் இருப்பது, கோபத்திற்கு இடம் கொடுத்தல், நன்றியின்மை, எவனோடும் நட்புக் கொள்ளாமல் இருப்பது, தீய உள்ளம் கொண்டிருப்பது ஆகியவை தீயவர்களைக் குறிக்கும். 19

# ஸ்ரீ விதுரர் அருளிய நீதி மொழிகள

எவன் தன் நலனை விரும்புகிறானோ அவன் உயர்ந்தவர்களைச் சேவிக்கின்றான். நடுத்தரமானவர்களைத் தகுந்த காலத்தில் சேவிக்கின்றான். ஆனால் கீழ்தரமானவர்களைச் சேவிப்பதேயில்லை. 20

தனது முயற்சி, அறிவு மற்றும் திறமையால் தீயவன் கெட்ட வழியில் செல்வத்தை அடைந்தாலும் அவன் தகுந்த பாராட்டையோ, உயர்குலத்தவர்கள் வாழும் வழியையோ அடைவதில்லை. 21

## த்ருதராஷ்டிரர் கூறினார் :

அறம் மற்றும் பொருளில் எப்போதும் கவனம் செலுத்தும் உயர்ந்த கல்வியுடைய தேவர்கள் உயர்ந்த குலங்களில் அன்பு வைத்துள்ளனர். விதுரரே! உயர்ந்தவை எனக் கருதப்படும் குலங்கள் யாவை என்னும் இக்கேள்வியை உம்மிடம் கேட்கின்றேன். 22

தவம், புலன்களை அடக்குதல், வேதத்தை அறிதல், யாகங்கள் செய்தல், புனிதமான திருமணங்கள் செய்தல், எப்போதும் அன்ன தானம் செய்தல் ஆகிய இக்குணங்கள் எங்கு நன்றாக உள்ளனவோ அக்குலங்கள் உயர்ந்தவை. 23

எக்குலங்கள் நல் நடவடிக்கைகளை விடுவதில்லையோ எவர் களின் மூதாதையர்கள் தமது சந்ததிகள் தவறு செய்யாததனால் வருத்தப்படுவதில்லையோ, (எக்குலங்களில்) சந்தோஷமான மனதுடன் அறத்தை மேற்கொள்கின்றனரோ, தமது குலத்திற்குச் சிறந்த புகழை விரும்பு

கின்றனரோ, பொய்யை விட்டு விட்டனரோ அத்தகைய குலங்கள் உயர்ந்த குலங்களாகும். 24

யாகம் செய்யாமையினாலும், தூய்மையற்ற திரு மணங்களினாலும், வேமதங்களை விட்டு விட்டதாலும், உத்தமப் ப்ராஹ்மணர்களைக் குறை கூறுவதாலும் உயர்ந்த குலங்கள் தாழ்ந்த குலங்களாகின்றன. 25

உத்தமப் ப்ராஹ்மணர்களை அலட்சியப்படுத்துவதா லும், அவர்களைக் குறை கூறுவதாலும், அவர்களிடம் கொடுத்துச் சென்றவற்றை அபகரித்துக் கொள்வதனாலும் உயர்குலங்கள் இழி குலங்கள் ஆகின்றன. 26

தெய்வங்களின் சொத்தை அழிப்பதனால் உத்தமப் ப்ராஹ் மணர்கள் சொத்தை அபகரிப்பதால் உத்தமப் ப்ராஹ்மணர்களிடம் ஒழுங்காக நடந்து கொள்ளாததனால் உயர்ந்த குலங்கள் இழி குலங்களாகின்றன. 27

எக்குலங்களில் பசுக்கள், மனிதர்கள் மற்றும் செல்வம் இருந்து, ஆனால் ஒழுங்கான நடத்தையில்லையோ அது உயர் குலம் என்ற வகைக்குச் சேருவதில்லை. 28

எளில் செல்வம் குறைவாக இருந்தாலும் நடத்தை ஒழுங்காக உள்ளதோ அவைகள் உயர்ந்த புகழையும், கீர்த்தியையும் அடைந்து 'உயர் குலம்' என்ற வகைக்குச் சேருகின்றன. 29

நன்னடத்தையை முயற்சியால் காக்க வேண்டும். செல்வம், வரவும், போகவும் செய்யும். செல்வமில்லாத தனால் ஒருவன் குறைந்து போக மாட்டான். ஆனால் நன்னடத்தை இல்லாவிட்டால் அவன் குறைந்தவன்

ஆவான். 30

பசுக்கள், மற்ற பிராணிகள், குதிரைகள், வயல் போன்றவை அதிகமான காரணத்தால் எந்தக் குலங்களில் நன்னடத்தையில்லையோ அவை மேன்மை அடைவது இல்லை. 31

எங்கள் குலத்தில் கலக்கமுண்டாக்குபவன், அரசனுக்கு (மற்றவர்களின் செல்வத்தைத் திருடும்) மந்திரி யாயிருப்பவன், நண்பர்களுக்குத் துரோகம் செய்பவன், போலி நடத்தை உள்ளவன், ரிஷிகள், தேவதைகள் மற்றும் விருந்தினர்களுக்குக் கொடுக்காமல் சாப்பிடு பவன் எவனும் இருக்க வேண்டாம். 32

எங்கள் குலத்தில், எவன் உத்தமப் ப்ராஹ்மணர்களை வதம் செய்கிறானோ் உத்தமப் பிராஹ்மணர்களை வெறுக்கிறானோ, உழவைத் தடை செய்கிறானோ, அப்பேற்ப்பட்டவன் நம்மோடு பாகத் தகுதி உடையவனில்லை. 33

ஆசனத்திற்குப்புல், அமருவதற்குப் பூமி, கால் கழுவ நீர், இனிய சொற்கள் ஆகிய இவை நல்லோர்களின் இல்லங்களில் எப்பொழுதும் இருக்கின்றன. 34

மன்னா! பேரறிவாளனே! தர்மத்தைக் கடைப்பிடிப்ப வர்கள் உயர்ந்த சிரத்தையுடன் விருந்தோம்பல் செய்வதற்கு (ஆசனத்திற்குப் புல், அமருவதற்குப் பூமி, கால் கழுவ நீர், இனிய சொற்கள் ஆகிய பொருட்களை) எப்பொழுதும்

வைத்துக் கொண்டு உள்ளனர். 35

மன்னா! ஸ்யந்தன மரம் மெல்லியதாய் இருந்தாலும் மற்ற பருமனான மரங்கள் தாங்கும் சுமையைத் தாங்கு வதற்கு சக்தியுடையதாய் உள்ளது. அதே போல் உயர்ந்த குலத்தவர்கள் சாமான்ய மக்கள் தாங்க முடியாத பாரத்தை யும் தாங்குவதற்கு சக்தி வாய்ந்தவர்கள். 36

எவனது கோபம் பயத்தை உண்டாக்குகிறதோ, எவனைப் பயத்துடன் சேவிக்க வேண்டுமோ அப்படிப்பட்டவன் நண்பன் அல்ல. எவனிடத்தில் தந்தையிடம் உள்ளதைப் போல விஸ்வாசம் வைத்துக் கொள்ளலாமா அப்பேற்பட்டவன் தான் உண்மையான நண்பனாவான். மற்ற நட்பு சாதாரணமான தொடர்பே ஆகும். 37

எவன், சம்பந்தப்பட்டவனாக இல்லாவிட்டாலும் நண்பனைப் போல நடந்து கொள்கிறானோ அவன் தான் உண்மையான நண்பன், உறவினன், கதி மற்றும் காப்பவன். 38

எவனது மனம் சஞ்சலமாக உள்ளதோ, எவன் பெரியோர்களை சேவிப்பதில்லையோ, எவன் இயற்கை யாகவே உறுதியுடனிருப்பதில்லையோ அப்பேற்பட்டவன் நட்பு கொள்ள முடியாது. 39

எப்படி அன்னப் பறவைகள் நீர் வரண்டுள்ள குளங்களை விட்டு விடுகின்றனவோ, அவ்வாறே சஞ்சலமான மனம்

கொண்டவனையும், அடக்கப்படாத மனம் கொண்டவனையும் பலன்களுக்கு அடிமையாக உள்ளவனையும் வெற்றி விட்டு விடுகிறது. 40

பலவின மனதுடையவர்கள், நிலையில்லாத மேகங்கள் போல் திடிரென்று கோபத்திற்கு ஆளாகின்றனர். மேலும் காரணமில்லாமல் திருப்தியும் அடைகின்றனர். 41

எவர்கள் நண்பர்களால் சேவிக்கப்பட்டு அவர்களால் பயன் பெற்றிருந்தாலும் நன்றியற்றவர்களாக இருந்தார்களோ அவர்கள் இறந்த பின் அவர்களது உடலைப் பறவைகளும் தீண்டுவதில்லை. 42

ஏழையாய் இருந்தாலும் செல்வந்தனாயிருந்தாலும் சிநேகி தர்களை உபசரிக்க வேண்டும். ஏதாவது கேட்கப் படும் வரை நண்பர்களின் சிரத்தையோ, அசிரத்தையோ அறிந்து கொள்ள முடியாது. 43

துன்பம் அழகை அழிக்கிறது. துன்பத்தினால் பலன் அழிகிறது. அறிவு தாபத்தினால் போய் விடுகிறது. துன்பம் வியாதியை ஏற்படுத்துகிறது. 44

கவலை ஒருவனைத்தான் விரும்பியதை அடையும்படி செய்யாமல் உடலை வாடவிட்டு எதிரிகளைச் சந்தோஷப் படுத்துகிறது. ஆதலால் கவலைக்கு இடம் கொடுக்காதீர்! 45

மனிதர்கள் மீண்டும், மீண்டும் மரணமடைகின்றனர்.

மீண்டும் மறுபிறப்பை அடைகின்றனர். மீண்டும் மீண்டும் அழிவும் பட்டு வளரவும் செய்கின்றனர். அவர்கள் யாசகம் செய்வார்கள். மற்றவர்,களாலும் யாசிக்கப்படுவார்கள். மற்றவர்களைப் பற்றி கவலையும் கொள்வார்கள். மற்ற வர்களின் கவலைக்கு இடமாகவும் ஆவார்கள். 46

இன்பம், துன்பம், செல்வமிருப்பது, இல்லாமல் இருப்பது, இலாபம், நஷ்டம், சாவு, வாழ்வு இவை எல்லோ ருக்கும் வருகின்றன. ஆகையால் தீரன் மகிழ்ச்சியோ, கவலையோ கொள்ளக் கூடாது. 47

இந்த (மனமோடு சேர்ந்த) 6 புலன்கள் எப்போதும் சஞ்சலமாய் உள்ளன. அவற்றில் பலமுள்ள புலனினால், எவ்வாறு பானையில் உள்ள ஓட்டையின் மூலமாக நீர் வீணாகிறதோ, அதைப் போல புத்தி வீணாகிறது. 48

## திருதராஷ்டிரர் கூறினார்

அக்னியைப் போலுள்ள யுதிஷ்டிரன் என்னால் ஏமாற்றப் பட்டான். அவன் எனது மந்தப் புதல்வர்களை யுத்தத்தில் நாசம் செய்து விடுவான். 49

ஆதலால் எல்லாம் எப்போதும் அபாயகரமாகத் தோன்று கிறது. எனது மனம் எப்பொழுதும் கவலையுடன் இருக்கி றது. உயர்ந்த மதியுடையவரே! கவலையேயில்லாத நிலை எது உண்டோ அதை என்னிடம் கூறுவீராக. 50

# ஸ்ரீ விதுரர் அருளிய நீதி மொழிகள்

**விதுரர் கூறினார் :**

ஞானம், தவம், புலன்களை அடக்குதல், பேராசையை விடுதல் இவைகளைக் காட்டிலும் உமது நன்மையை வேற எதிலும் நான் காண்பதில்லை. 51

அறிவினால் பயம் போக்கப்படுகிறது. தவத்தினால் உயர்ந்ததை ஒருவன் அடைகிறான். குருவின் சேவையால் ஞானம் ஏற்படுகிறது. அமைதி யோகத்தினால் அடையப் படுகிறது. 52

தானத்தினால் வரக்கூடிய புண்ணியத்தையோ, வேதத் தில் சொல்லப்பட்ட கர்மாவினால் வரும் புண்ணியத்தையே நாடாமல், மோக்ஷத்தை விரும்புபவர்கள் விருப்பு வெறுப்புகளை விட்டு வாழ்க்கை நடத்துகின்றனர். 53

நன்கு படிப்பதால், நியாயமான வகையில் யுத்தம் செய்வதால், மற்றும் கடுந்தவம் புரிவதால் ஏற்படும் இன்பம் கடைசியில் வளர்கிறது. 54

வேற்றுமையைக் காண்பவர்கள் நல்ல படுக்கை களினாலும் தூக்கம் பெறுவதில்லை. மன்னா! அப்பேற் பட்டவர்களுக்கு பெண்களாலோ, போற்றுபவர்களின் துதி களினாலோ இன்பம் கிடைப்பதில்லை. 55

வேற்றுமை காண்பவர்கள் அறத்தை என்றுமே கடைப் பிடிப்பதில்லை. சுகத்தைப் பெறுவதில்லை. கௌரவத்தை அடைவதில்லை. அமைதியும் பெறுவதில்லை. 56

அப்பேற்பட்டவர்களுக்கு யோக க்ஷேமம் கிடையாது. மனிதர்களின் தலைவரே! அவர்களுக்கு அழிவு ஒன்றுதான் உள்ளது. உயர்ந்தகதியல்ல. 57

பசுவில் எவ்வாறு பால் உள்ளதோ, ப்ராஹ்மணர்களில் எவ்வாறு தவம் இருக்கலாமோ, பெண்களில் எவ்வாறு சபலம் இருக்கலாமோ (அதே போல்) உறவினர்கள் குறித்து பயம் ஏற்பட வழியுண்டு. 58

சமமான நீளமுள்ள பல நூல்கள் சேர்ந்தால் எவ்வாறு சுமையைத் தாங்க முடியாமோ அதே போல் நல்ல உறவினர்கள் சேர்ந்தால் சக்தி ஏற்படும். 59

நூல்கள் தனித்தனியாக எரிந்தால் புகையை மட்டும் ஏற்படுத்துகின்றன. சேர்ந்து எரித்தால் ஜ்வாலையை ஏற்படுத்துகின்றன. பரதர்களில் காளையே! த்ருதராஷ்டிரரே! நல்ல உறவினர்களின் விஷயமும் இவ்வாறு தான் உள்ளது. 60

த்ருதராஷ்டிரரே! சாதுக்கள் ப்ராஹ்மணர்கள், பெண்கள், உறவினர்கள் மற்றும் பசுக்கள் குறித்து எவன் தனது வீரத்தைக் காட்டுகிறானோ அவன் காம்பிலிருந்த பழுத்த பழம் விழுவதைப் போல் விழுந்து விடுகின்றான். 61

தனியாக இருக்கும் பெரிய மரம் பலம் மிகுந்து இருந்தாலும் பூமியில் ஆழ்ந்த அளவிற்கு வேரைப் பரப்பியதாயிருந்தாலும் காற்றினால் ஒரு நொடியில் தண்டு மரம் ஒடிந்து நாசமடைகிறது. 62

ஆனால் எந்த மரங்கள் சேர்ந்து நன்கு வளர்ந்து உள்ளனவோ அவை ஒன்றுக்கொன்று பலத்தைக் கொடுத்து வேகமாக வீசும் காற்றையும் தாங்குகின்றன. 63

குணத்தோடு கூடியவனாய் இருந்தாலும் மனிதன் தனிப்பட்டவனாய் இருந்தால் அவனை, காற்று மரத்தை வெல்வதைப் போல வெல்ல முடியும் என்று அவனது எதிரிகள் கருதுகின்றனர். 64

உறவினர்கள் ஒருக்கொருவர் பலத்தையும் உதவியையும் கொடுத்து குளத்திலுள்ள தாமரைத் தண்டுகள் போல் (சேர்ந்து) வளர்கிறார்கள். 65

சாதுக்கள், ப்ராஹ்மணர்கள், பசுக்கள், உறவினர்கள், குழந்தைகள் மற்றும் பெண்களையும், எவர்களிடமிருந்து ஒருவன் உணவு பெற்றுள்ளானோ அவர்களையும், எவர்கள் ஒரவனிடம் சரணம் அடைந்தனரோ அவர்களையும், ஒருவன் வதம் செய்யக் கூடாது. 66

பணமில்லாவிட்டால் மனிதனில் எந்த குணமும் தெளிவாகத் தெரியவதில்லை. அரசரே! உடல் நலமிருந்தால் நீங்கள் நன்மையைக் காணலாம். உடல் நலம் இல்லாதவன் செத்தவனைப் போல் உள்ளான். 67

மன்னாதி மன்னனே! கோபம் என்பது வியாதியல்லாத தலைவலி. அது எரிச்சலூட்டக் கூடிய – சூடான – கஷ்டத்தைக் கொடுக்கும் பானம். அதைத் தீயவர்கள்

விழுங்குவதில்லை. ஆனால் நல்லோர்கள் விழுங்க வேண்டும். நீங்கள் அதை விழுங்கி அமைதியை அடைவீர்களாக! 68

ரோகத்தினால் துன்பப்படுபவர்கள், பலன்களை அடைவதில்லை. பொருட்களைப் பற்றிய அறிவும், பெறுவதில்லை. ரோகமுள்ளவர்கள் எப்பொழுதும் துன்பத்தை அனுபவிக்கின்றனர். செல்வத்தை அடையக் கூடிய இன்பத்தையோ அதனால் வரக்கூடிய போகத்தையோ அறிவதில்லை. 69

அரசரே! சூதாட்டத்தில் வெல்லப்பட்ட திரௌபதியைக் கண்டு நான் உம்மிடம், " நேர்மையாக இருப்பவர்கள் விளை யாட்டில் கபடத்தை விட்டு விடுகின்றனர். துரியோதனனைத் தடுத்து விடுங்கள் " என்று முன்பே கூறினேன். ஆனால் நீங்கள் அதன்படி நடந்து கொள்ளவில்லை. 70

எந்த பலம் மிருகத் தன்மைக்கு நேர்மாறாக உள்ளதோ அது பலமே அல்ல. நுட்பமான தர்மத்தை உடனே சேவிக்க வேண்டும். கொடுமையை அடிப்படையாகக் கொண்டதெல்லாம் நாசமடைகிறது. மிருதுத் தன்மையை அடிப்படை யாகக் கொண்ட செல்வம் பையன்கள், பேரன்கள் வரை செல்கிறது. 71

உமது புதல்வர்கள் பாண்டவர்களைப் பராமரிக்கட்டும். பாண்டவர்கள் உம்மையும், உமது புதல்வர்களையும் பராமரிக்கட்டும். குரு வம்சத்தைச் சேர்ந்த பாண்டவர்களுக்கும்,

கௌரவர்களுக்கும் ஒரே நண்பர்களும் ஒரே எதிரிகளும் ஒரே செயலும் இருக்கட்டும். 72

கௌரவர்களுக்கு இப்போதும் நீங்கள் ஆதாரமாய் உள்ளீர்கள். அஜாமிடரே! குரு வம்சம் உம்மைச் சார்ந்து உள்ளது. குந்தியின் குழந்தைகள் வனவாசத்தினால் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். தந்தையே! உமது புகழைக் காப்பாற்றிக் கொண்டு அவர்களைப் பராமரித்து வாருங்கள். 73

அரசரே! கௌரவர்களையும், பாண்டவர்களையும் சேர்த்து வைப்பீர்களாக! எதிரிகள் உமது குற்றங்களைக் காணாமல் இருக்கட்டும். பாண்டவர்கள் எல்லோரும் உண்மையில் ஈடுபாடு வைத்து உள்ளனர். துரியோதனனைப் போரிலிருந்து தடுப்பீர்களாக! 74

## ஸ்ரீ விதுரர் கூறினார்

அரசரே! விசித்ர வீர்யரின் புதல்வரே! ஸ்வாயம்புவ என்கிற மனு, பதினேழு பேர்வழிகள் ஆகாசத்தைத் தமது முஷ்டிகளினால் குத்த விருப்பமுள்ளவர்களாகவும், இந்திரன் வில்லை வளைப்பதற்கும், கிரஹிக்க முடியாத கதிரவனின் கிரஹணங்களை கிரஹிப்பதற்கும் விரும்புபவர்களைப் போலுள்ளனர் என்று கூறி உள்ளார். 75

1. அடக்க முடியாதவனை அடக்க விரும்புபவன் 2. சிறு இலாபத் தினால் திருப்தியடைபவன் 3. எதிரிகளைப் பணிவுடன் சேவிப்பவன் 4. பெண்களைக் காக்க விரும்பு

பவன் 5. யாரிடம் தானத்தைக் கேட்கக் கூடாதோ அவரிடம் கேட்பவன் 6. ஏதாவது செய்து தன்னுடைய புகழ் பாடுபவன். 76

7. நற்குலத்தில் பிறந்தும் தீயவை செய்பவன். 8. பலம் இல்லாத வனாகியிருந்தும் பலமுடையவனை எதிர்ப்பவன் 9.சிரத்தையுடன் கவனிக்காமல் இருப்பவனிடம் பேசுபவன் 10. அடைய முடியாததை அடைய விரும்புபவன். 77

11. மாமனாராய் இருந்தும் மருமகளோடு சேர்ந்து பரிகசிப்பவன் 12. தனது கவலைகள் மருமகளால் நீங்கப் பெற்றுப் பெருமிதம் கொள்பவன் 13. தனது விதைகளை மற்றவர்களது வயலில் இடுபவன் 14. தனது மனைவியைப் பற்றித் தவறாகப் பேசுபவன். 78

15. மற்றவர்களிடமிருந்து ஏதாவது பெற்று விட்டு ஞாபமில்லை என்ற கூறுபவன் 16. தீர்த்த ஸ்தலங்களில் ஏதாவது தானம் செய்கிறேன் என்ற சொல்லி அதைக் கொடுக்காமல் இருந்தும் வீட்டில் பெருமையடித்துக் கொள்பவன் 17.எது தவறோ அதை உண்மை என்று நிலை நாட்ட முயற்சி செய்பவன் ஆகிய இவர்களே அந்தப் பதினேழு பேர்கள். இவர்களைப் பாசக் கயிற்றை வைத்துள்ள யம தூதர்கள் நரகத்திற்கு அழைத்துச் செல்கின்றனர். 79

ஒருவனிடம் மற்றொருவன் எப்படி நடந்து கொள்கிறானோ அவனிடம் அப்பேற்பட்ட வகையில் நடந்து கொள்ள வேண்டும். அது தான் தர்மம். ஏமாற்றுபவனோடு

ஏமாற்றுமாறு நடந்து கொள்ள வேண்டும். நேர்மையோடு நடந்து கொள்பவனிடம் நேர்மையோடு நடந்து கொள்ள வேண்டும். 80

மூப்பு அழகை அழிக்கிறது. ஆசை தைரியத்தை நாசம் செய்கிறது. சாவு பிராணங்களை நாசம் செய்கிறது. பொறாமை தர்மத்தை நாசம் செய்கிறது. கோபம் செல்வத்தை அழிக்கிறது. தீயவர்களின் நட்பு நன்னடத்தையை அழிக்கிறது. காமம் பணிவை அழிக்கிறது. கர்வம் எல்லாவற்றையும் அழிக்கிறது. 81

### த்ருதராஷ்டிரர் கூறினார்!

எல்லா வேதங்களிலும் மனிதனின் ஆயுள் நூறு வருடங்கள் என்று கூறப்பட்டு உள்ளது. அப்படியிருக்கையில் எக்காரணத்தினால் எல்லோரும் பூர்ண ஆயுளைப் பெறுவதில்லை? 82

### ஸ்ரீ விதுரர் கூறினார்!

அரசரே! கர்வம், பேச்சு, உணவு ஆகியவை அதிகமாவது, கோபம், போகம் வேண்டும் என்ற ஆசை. நண்பனுக்கு துரோகம் செய்வது ஆகிய ஆறு கூர்மையான வாட்கள் மனிதர்களின் ஆயுளை வெட்டி விடுகின்றன. மனிதர்களை இவைகள் தான் வதம் செய்கின்றன. மரணம் இல்லை. இதையறிந்து நன்மை பெறுவீர்களாக! 83

பாரதனே! தன்னிடத்தில் நம்பிக்கை வைத்தவனின் மனைவியை அபகரிப்பவன், தன் குருவின் மனைவியைக் கெடுப்பவன், தாஸிப் பெண்ணின் கணவன், கள்ளைக் குடிப்பவன். 84

கிராமத் தலைவனாக உள்ளவன், ப்ராஹ்மணர்களின் வாழ்வுக்குத் தேவையானவற்றைப் பறித்துக் கொள்பவன். ப்ராஹ்மணர்களுக்குக் கட்டளை கொடுப்பவன். சரண மடைந்தவனை வதம் செய்தவன். இவர்கள் எல்லோரும் பிர்ம்மஞானியை வதம் செய்த சமமான பாவத்திற்கு ஆளா கின்றனர். இவர்களோடு சம்பந்தம் ஏற்பட்டால் பிராயச் சித்தங்கள் தேவை என்று வேதங்கள் கூறுகின்றன. 85

நல்லுரைகளை ஏற்றுக் கொள்பவன், தர்மத்தை அறிந்தவன், தாராள மனதுடையவன், தேவைகளுக்கும், பித்ருக்களுக்கும் அர்ப்பிக்கப்பட்ட உணவைச் சாப்பிடு பவன், யாருக்கும் துன்பம் தராதவன், நன்றியுடையவன், பணிவோடு இருப்பவன், சாஸ்திரங்களை அறிந்தவன் – இத்தகைய அனைத்துக் குணங்களையும் உடையவனாக இருக்கும் ஒருவன் ஸ்வர்கத்தை அடைகின்றான். 86

அரசே! பிரியமாய்ப் பேசும் மனிதர்களை எளிதாகக் காண லாம். நன்மையைக் கொடுக்கும் இனிமையற்ற சொற்களைக் கூறுபவனும், கேட்பவனும் கிடைப்பது அரிது. 87

எவன் தர்மத்தைக் கடைப்பிடித்து இனியது அல்லத இன்னாதது என்ற யோசனையை விட்டு விட்டு தனது

தலைவனுக்கு எது நன்மையோ அது இன்னாததாய் இருந்தாலும் கூறுகின்றானோ அப்பேற்பட்டவன் அரசனுக்கு உதவியளிப்பவன். 88

குலத்திற்காக மனிதனை விட்டுவிட வேண்டும். கிராமத்திற்காகக் குலத்தை விட்டு விட வேண்டும். இராஜ்யத்திற்காக கிராமத்தை விட்டு விட வேண்டும். ஆத்மாவிற்காகப் பூமியையே விட்டு விட வேண்டும். 89

கஷ்டங்களை மனதில் வைத்துக் கொண்டு செல்வத்தைக் காப்பாற்ற வேண்டும். செல்வத்தின் மூலமாக மனைவியைக் காக்க வேண்டும். தன்னை மனைவி மூலமாகவும், செல்வம் மூலமாகவும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். 90

பழங்காலத்திலிருந்தே சூதாடுவது மனிதனுக்குப் பகைமையை உண்டாக்குவது என்று சொல்லப்படுகின்றது. ஆதலால் விளையாட்டிற்காகக் கூட புத்தியுடையவன் சூதாடக் கூடாது. 91

ப்ராதிபேயரே! சூதாட்டம் நடக்கும் காலத்திலேயே நான் 'இது தவறு' என்று உம்மிடம் கூறினேன். ஆனால் விசித்திரவீர்யனின் புதல்வனே! நோயாளிக்கு எவ்வாறு மருந்து சுவையாக இருப்பதில்லையோ அதே போல் உங்களுக்கு என் சொற்கள் சுவையாக இருக்கவில்லை. 92

அரசனே! விசித்திரமான இறகுகளுடன் இருக்கும் மயில்களான பாண்டவர்களை காகம் போல் உள்ள புதல்வர்களால் நீங்கள் வெல்ல விரும்புகின்றீர்கள். சிங்க மாகிய அவர்களை விட்டு விட்டு உம் புதல்வர்களான நரி களை இரட்சிக்க விரும்புகிறீர்கள். பொருந்திய காலம்வரும் போது இதற்கெல்லாம் நீங்கள் வருத்தப்படுவீர்கள். 93

தந்தையே! எவன் தனது வேலைக்காரன் மற்றும் தன்னிடம் கௌரவம் வைத்திருக்கும் பக்தனிடம் கோபிக்கா மல் அவர்களின் நலனில் எப்போதும் ஈடபட்டுள்ளானோ அப்பேற்பட்ட தலைவனிடம் வேலைக்காரர்கள் விசுவாசம் வைக்கின்றனர். அவனுக்குக் கஷ்டம் வரும் காலத்திலும் அவர்கள் அவனை விடுவதில்லை. 94

வேலைக்காரர்களின் வாழ்க்கைக்கு ஊறு விளைவிப்ப தன் மூலம் செல்வத்தை வளரும்படி செய்யக் கூடாது. ஒரு வனிடம் பற்று வைத்திருக்கும் மந்திரிகள் கூட, வாழ்விற்கும் போகத்திற்கும் வழிகள் போய்விட்டால் அவனுக்கு எதிரி களாகி, கஷ்டகாலத்தில் அவனை விட்டு விடுகின்றனர். 95

தான் செய்யப் போவதைப் பற்றி முதலில் சிந்தித்துத் தன் வருமானத்தையும், செலவையும் மனதில் வைத்துக் கொண்டு வேலைக்காரர்களுக்குச் சம்பளத்தைத் தீர்மா னிக்க வேண்டும். அவ்வாறு செய்து விட்டு உதவியைப் பெற்றுக் கொள்ள வேண்டும். உதவியின் மூலமாகக் கடினமானவற்றையும் சாதிக்க முடியும். 96

# ஸ்ரீ விதுரர் அருளிய நீதிமொழிகள்

எவன் தன் தலைவனின் கருத்தறிந்து எல்லா வேலைகளையும் நேரமாக்காமல் செய்கின்றானோ, மேலும் நாயகனின் நன்மையைக் கூறுகின்றானோ அவரிடம் பற்று வைத்தள்ளானோ, நன்னடத்தை கொண்டிருக்கிறானோ, தனது திறமையை அறிந்துள்ளானோ அப்படிப்பட்டவனுக்கு மிகுந்த கருணை காட்ட வேண்டும். 97

எந்த வேலைக்காரனிடம் கட்டளை கொடுத்தால் அதன்படி நடந்து கொள்வதில்லையோ, ஏதாவது காரியம் கொடத்தால் எதிர்த்துப் பேசுகின்றானோ, தனக்க மிகுந்த அறிவுள்ளது என்று நினைக்கின்றானோ, வாதாடுகின் றானோ அப்பேற்பட்டவனை உடனே விட்டு விட வேண் டும். 98

கர்வமில்லாமலிருப்பது, சாமர்த்தியம், நேரமாக்காமல் இருப்பது, தயையிருப்பது, சுத்தமாயிருப்பது, மற்றவளால் கெடுக்கப்படாமலிருப்பது, வியாதியில்லாமல் இருப்பது நல்ல குலத்தில் சேர்ந்திருப்பது உதாரமான வார்த்தைகள் பேசுவது – இவ்வெட்டும் நல்ல தூதுவனின் குணங்கள் என்று சொல்லப்படுகின்றன. 99

எந்த மனிதனும் தனது எதிரியின் வீட்டிற்குத் தெரிவித்துக் கூட சாயங்காலத்திற்கு மேல் செல்லக் கூடாது. இரவில் மற்றொருவனின் இடத்தில் மறைந்து இருக்கக் கூடாது. அரசன் விரும்பும் பெண்ணை விரும்பக் கூடாது. 100

எவன் கீழ்த்தரமான நட்பை வைத்துள்ளானோ,

சந்திப்பவர்கள் எல்லோரிடமும் கருத்தைத் தெரிவித்துக் கொள்கிறானோ அப்பேற்பட்டவனிடம் விஸ்வாசம் வைத்து கொள்ளாமல் இருந்தாலும் அவனிடம் 'நான் உன்னை நம்புவதில்லை' என்று (நேரடியாகச்) சொல்லாமல் ஏதாவது ஒரு காரணம் கூறி (அவனை) அனுப்பி விட வேண்டும். 101

அதிகக் கருணை உடைய மன்னன், காமமுடைய பெண், அரசனின் வேலைக்காரன், புதல்வன், சகோதரன், சிறு குழந்தையுடைய விதவை, சைன்யத்தில் உள்ளவன், பெரிய நஷ்டத்தால் கஷ்டப்பட்டவன் ஆகிய இவர்கள் பணத்தைக் கொடுப்பதோ வாங்குவதோ கிடையாது. 102

அறிவு, உயர் பிறவி, புலன்களை அடக்குதல், கல்வி, வீரம், அதிகமாகப் பேசாமலிருத்தல், சக்திக்கேற்ற தானம், நன்றி ஆகிய எட்டு குணங்கள் மனிதனுக்குப் பெருமை சேர்க்கின்றன. 103

தந்தையரே! ஒரு குணம் இந்த எட்டு குணங்களையும் ஒரே இடத்தில் சேரும்படிச் செய்கிறது. எப்போது அரசன் ஒரு மனிதனுக்கு சன்மானம் கொடுக்கின்றானோ அப் போது அவனுக்கு (இயற்கையாக அக்குணங்கள் இல்லா விட்டாலும்) அந்த எல்லா குணங்களும் பிரகாசத்தைத் தருகின்றன. 104

பலம், அழகு, தெளிவான குரல், எல்லா அக்ஷரங்களை யும் உச்சரிக்கும் திறமை, மிருதுவான ஸ்பரிசம், நல்ல வாசனை, தூய்மை, லக்ஷணமாயிருப்பது, நல்ல அங்கங்

கள், அழகான பெண்கள் ஆகிய இந்தப் பத்தும் நன்கு குளிப்பவர்களுக்குக் கிடைக்கின்றன.
105

ஆரோக்யம், நீண்ட ஆயுள், இன்பம், ஆரோக்யமுடைய புதல்வர்கள், 'அதிகம் சாப்பிடுகிறான்' என்ற குற்றம் இல்லாமலிருப்பது ஆகிய இவை ஆறையும் சிறிதளவு சாப்பிடுபவன் பெறுகிறான்.
106

கெட்ட செயல்களைச் செய்பவன், அதிகமாகச் சாப்பிடுபவன், உலகத்தோரால் வெறுக்கப்பட்டவன், வேஷக்காரன், குரூரமாயிருப்பவன், காலம், இடம், இவற்றிற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளத் தெரியாதவன். பொருந்தாத ஆடையை உடுத்திக் கொள்பவன், இத்தகை யோருக்கு வீட்டில் வாசம் செய்வதற்கு இடம் கொடுக்கக் கூடாது.
107

கஞ்சன், மற்றவர்களைப் பற்றித் தவறாகப் பேசுபவன், சாஸ்திரங்களை அறியாதவன், காட்டில் வசிப்பவன், வஞ்சகன், யாரிடம் மரியாதை கொடுக்க வேண்டுமோ அவர்களைக் கவனிக்காமலிருப்பவன், குரூரமாயிருப்பவன், அடிக்கடி மற்றவர்களிடம் சண்டை போடுபவன், நன்றி யில்லாதவன் ஆகியோரிடம் ஒருவன் எவ்வளவு கஷ்டத்திலிருந்தாலும் யாசகம் செய்யக் கூடாது.
108

எதிரியாய் இருப்பவன், எப்போதும் தவறு செய்பவன், பொய் பேசுபவன், தேவதை (கடவுள்) விஷயத்தில் பக்தி யில்லாதவன், அன்பில்லாதவன், தனக்கு எல்லா சாமர்த்தி



யமும் இருக்கிறது என்று கருதுபவன் ஆகிய இத்தகைய நீசமான ஆறு பேர்களை ஆதரிக்கக் கூடாது. 109

ஒருவனது குறிக்கோள் வெற்றி பெறுவதற்கு சாதனை களே ஆதாரமாக இருக்கின்றன. வழிகள் குறிக்கோளையே சார்ந்துள்ளன. இவைகள் ஒன்றுக்கொன்று தொடர்புடை யவை. ஆகவே வெற்றி இவையிரண்டையும் ஆதாரமாகக் கொண்டது. 110

புதல்வர்களைப் பெற்று அவர்களுக்கு ஏதாவது ஏற்பாடு செய்து (அவர்களை) சுதந்திரமாக்கி விட்டு (வாழ்விற்கு ஏற்பாடு செய்து) கன்னிப் பெண்களை பொருத்தமான வரன்களுக்குக் கொடுத்து (ஒருவன்) காட்டிற்குச் சென்று மனிவராக வாழ வேண்டும். 111

இறைவனது அருள் பெறுவதற்காக ஒருவன் எல்லா உயிர்களுக்கும் எது நன்மையாகுமோ, மேலும் தனது இன்பத்திற்கு எது நல்லதோ அதைச் செய்ய வேண்டும். இது தான் எல்லாவற்றையும் சாதிப்பதற்கு மூலமாகும். 112

எவனுக்கு புத்தி, சக்தி, தேஜஸ், பணம், சுறுசுறுபபு, முயற்சி அகியவை இருக்கின்றனவோ அப்பேற்பட்டவனுக்கு வாழ்க்கை நடத்த என்ன கவலையிருக்கிறது? 113

பாண்டவர்களைப் பிரிந்ததால் வரும் குற்றத்தை நீங்கள் பாருங்கள். இந்திரன் முதலான தேவர்கள் வருத்தப் படுவார்கள். உங்கள் புதல்வர்களுடன் பகைமை, எப்போ தும் கவலையுடன் நடத்தப்படும் வாழ்வு, குரு வம்சத்தின்

நல்ல புகழின் அழிவு, உமது எதிரிகளின் மகிழ்ச்சி – இத்தகைய குற்றங்கள் (வந்து சேரும்) 114

இந்திரனுக்கு ஒப்பானவரே! பீஷ்மர், துரோணர் அரசனான யுதிஷ்டிரர் மற்றும் தங்களுக்கும் கோபம் ஏற்பட்டு எரி நட்சத்திரம் பூமியில் நேரடியாக விழுவதைப் போல் உலகத்தையே அழித்து விடும். 115

உமது நூறு புதல்வர்கள், கர்ணன் மற்றும் பாண்டுவின் புதல்வர்கள் ஒன்று சேர்ந்தால் கடலை எல்லையாய்க் கொண்ட அனைத்து பூமியையும் ஆளலாம். 116

அரசரே! உமது புதல்வர்கள் காட்டைப் போல் உள்ளனர். பாண்டவர்கள் புலிகளைப் போல் இருக்கின்றனர். புலிகளுடனிருக்கும் காட்டை அழித்து விடாதீர்கள். புலிகளைக் காட்டிலிருந்து விரட்டி விடாதீர்கள். 117

புலிகளில்லாத காடில்லை. காடில்லாமல் புலிகளில்லை. புலிகள் காட்டைக் காக்கின்றன. வனம் புலிகளைக் காக்கின்றது. 118

தீய மனமுடையவர்கள் பிறரின் நல்ல குணங்களை அறிய விரும்பாமல் குற்றங்களையே அறிய விரும்புகின்றனர். 119

எவன் எல்லா விஷயங்களிலும் வெற்றியின் எல்லையை விரும்புகின்றானோ அவன் எப்போதும் தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ஸ்வர்கத்தில் இருந்து அம்ருதம் எவ்வாறு பிரிந்திருப்பதில்லையோ அதே போல் தர்மத்தில்

இருந்து உண்மையான இலாபம் பிரிந்திருப்பதில்லை. 120

எவனது மனம் பாவத்துடன் சம்பந்தத்தை விட்டு விட்டு புண்ணியத்திலேயே உறுதியாக உள்ளதோ அப்பேற்பட்ட மனம் எல்லாப் பொருட்களின் இயற்கை நிலைகளையும் தாற்காலிக நிலைகளையும் அறிகிறது. 121

எவன் அறம், பொருள் மற்றும் இன்பத்தைத் தகுந்த காலத்தில் செய்கின்றானோ அவன் மறுவுலகத்திலும் இம்மூன்றையும் அடைகிறான். 122

மன்னனே! எவன் கோபம் மற்றும் மகிழ்ச்சியின் வேகத்தை அடக்கி வைக்கிறானோ அவன் ஆபத்திலும் கலக்கத்தை அடைவதில்லை. மேலும் செழிப்பை அடைகிறான். 123

மனிதனுக்கு ஐந்து விதமான பலங்கள் உள்ளன. அதை என் மூலமாகத் தெரிந்து கொள்வீராக. எது உடல் பலமோ அது கீழ்த்தரமானது என்று கூறப்படுகிறது. 124

மந்திரிகளால் ஏற்படும் பலம் இரண்டாவதாகக் கூறப் படுகிறது. செல்வத்தைப் பெறுவதை மூன்றாவது பலமாகப் புத்திமான்கள் கூறுகின்றனர். 125

மன்னா! தந்தை, தாத்தா அவர்கள் மூலம் பிறவியால் பெறும் பலம் நான்காவது ஆகும். 126

## ஸ்ரீ விதுரர் அருளிய நீதிமொழிகள்

பாரதனே! எதன் மூலமாக இதெல்லாவற்றையும் அடைய முடியுமோ, மேலும் எது எல்லாவித பலங்களைக் காட்டிலும் உயர்ந்ததாக இருக்கிறதோ அது அறிவின் பலம் எனப்படுகிறது. 127

காயத்தை ஏற்படுத்தச் சாமர்த்தியம் உடையவனுக்கு அபகாரம் செய்து விட்டு, "நான் அவனைக் காட்டிலும் தூரத்தில் இருக்கிறேன்" என்று தனக்குத் தானே ஆறுதல் கொடுத்துக் கொள்வது கூடாது. 128

பெண்கள், அரசர்கள், பாம்புகள், தனது நாயகன், எதிரிகள், போகங்கள், ஆயுள் இவைகளில் எந்த அறிவாளி விஃவாசம் வைக்க முடியும்? 129

அறிவு என்கிற அம்பால் காயமடைந்தவனுக்க, மருத்து வர்களோ, மருந்துகளோ கிடையாது. அத்தகைய மனித னுக்கு ஹோம மந்திரங்களோ, புண்ணிய கர்மாக்களோ, அதர்வ வேதத்தின் மந்திரங்களோ, விஷத்தை முறிக்கும் பொருட்களோ பிரயோஜனப்படுவதில்லை. 130

பாம்பு, நெருப்பு, சிங்கம் உறவினர்கள் ஆகியவர்களை ஒரு மனிதன் அலட்சியப்படுத்துதல் கூடாது. இவைகளுக்கு அதிகமான சக்தி உண்டு. 131

அக்னி, உலகில் மிக சக்தி வாய்ந்தது. அது மரங்களில் மறைந்து இருக்கிறது. உள்ளே உள்ள அக்னியை ஜ்வாலை ஏற்படும்படி செய்யாவிட்டால் அது அந்த விறகைச் சாம்பல் ஆக்காது. 132

அதே அக்னி, விறகுகளை உரசி ஜ்வாலையாக்கினால் தான் இருக்கும் விறகையும், காட்டையும் மற்ற பல பொருட்களையும் தனது சக்தியால் எரித்து விடும். 133

இதே போல் உயர் குலத்தில் பிறந்தவர்கள் அக்னியைப் போல் சக்தி படைத்தவர்களாக உள்ளனர். பொறுமை யிருப்பதால் விறகில் அக்னி இருப்பதைப் போல் சாந்த மாயிருக்கின்றனர். 134

நீங்களும் உம் புதல்வர்களும் கொடியைப் போல் இருக்கின்றீர்கள். பாண்டவர்கள் சாலா மரத்தைப் போல் (உறுதியான பெரிய மரங்கள்) உள்ளனர். பெரிய மரத்தை ஆதாரமாகக் கொள்ளாமல் ஒரு கொடியானது எந்தக் காலத்திலும் வளருவதில்லை. 135

அம்பிகையின் புதல்வரே! உமது புதல்வன் காட்டைப் போல் உள்ளான். தந்தையே! அந்தக் காட்டில் உள்ள சிம்மங்கள் (பாண்டவர்கள்) என்று தெரிந்து கொள்வீராக! சிம்மம் இல்லாத காடு அழிவடையும். காடு இல்லாத சிம்மங்களும் அழிவடையும். 136

## ஸ்ரீ விதுரர் கூறியது

ஒரு பெரியவர் வந்தால் யுவனின் பிராணங்கள் மேல் நோக்கிச் செல்கின்றன. அவரே நோக்கிச் சென்று நமஸ் காரம் செய்தால் அவைகள் முன்போலாகின்றன. 137

தன்னடக்கமுடையவன், முதலில் (தன்னிடம்) வந்த

## ஸ்ரீ விதுரர் அருளிய நீதிமொழிகள்

நல்லவருக்கு ஆசனத்தைக் கொடுத்து, நீரைக் கொண்டு அவரது பாதங்களைச் சுத்தப்படுத்தி, குசலம் விசாரித்து பிறக தனது சமாசாரங்களைக் கூறி (சிரத்தையுடன்) எல்லா வற்றையும் கவனித்து ஆகாரம் கொடுக்க வேண்டும். 138

மந்திரத்தை அறிந்த அந்தணன், எவரது இல்லத்திலிருந்து நீரையோ, மதுபர்க்கத்தையோ, (தேன்) சுவையோ, கொடுப்பவருக்கு லோபம் இருப்பதினாலோ கொடுக்க விருப்பமில்லாததாலோ ஏற்றுக் கொள்வதில் லையோ அந்த வீட்டுக்காரனின் வாழ்க்கை வீண் என நல்லோர்கள் கூறுகின்றனர். 139

மருத்துவர், அம்பு செய்பவன், பிரம்மசர்ய விரதம் கெட்டுப் போனவன், திருடன், கடுமையானவன், கள்ளைக் குடிப்பவன், வயிற்றில் உள்ள குழந்தையைக் கொல்பவன், சைன்யத்தில் வேலை செய்து வாழ்க்கை நடத்தபவன், வேதத்தைப் பணத்திற்காக கற்றுக் கொடுப்பவன் ஆகிய இவர்கள் ஜலம் வாங்குவதற்கும், தகுதியில்லாமல் இருந்தாலும், கிருஹஸ்தனால், மிகவும் பிரியமாயிருப்ப வர்கள் என்று கருதப்பட வேண்டும். 140

உப்பு, சாதம், தயிர், பால், தேன், எண்ணெய், நெய், எள், மாமிசம், பழங்கள், கிழங்குகள், காய்கறி, வர்ணம் போட்ட துணி, வாசனைத் திரவியங்கள், வெல்லம் ஆகிய இவைகளை விற்கக் கூடாது. 141

எவன் கோபத்திற்கு இடம் கொடுப்பதில்லையோ, மண், கல், தங்கம் இவற்றைச் சமமாகப் பார்க்கின்றானோ

கவலையற்று உள்ளானோ, நட்பு பகைமை என்பவைகளின் சம்பந்தத்தை விட்டுவிட்டவனோ, பாராட்டையும் இகழ்ச்சி யையும் கவனிக்காமல் இருப்பானோ அப்பேற்பட்ட உதாசீனமாக இருப்பவன் மெய்யான துறவியாவான் 142

புறம்போக்கில் வளருகின்ற நெல், வேர், காய்கறி இவைகளைச் சாப்பிட்டு யார் வாழ்கின்றானோ, எவன் தன் மனதை அடக்கி உள்ளானோ, அக்னி காரியங்களைச் செய்கின்றானோ, காட்டில் வசித்தக் கொண்டி ருக்கிறானோ, விருந்தாளிகளைக் கவனிக்காமல் இருப்ப தில்லையோ அப்பேற்பட்ட புண்யசாலியானவன் தபஸ்வி களில் உயர்ந்தவன். 143

ஒரு புத்திமானுக்குக் கெடுதல் செய்து விட்டு, "நான் தூரத்தில் இருக்கிறேன்" என்று ஒருவன் தனக்குத் தானே ஆறுதல் கொள்ளக் கூடாது. புத்திமானுக்கு நீண்ட கைகள் இருப்பதால் அவன் துன்பமிழைப்பவர்களைத் தண்டிக்கி றான். 144

வஸ்வாசம் வைக்கப்படுவதற்குத் தகுதியில்லாவனிடம் விஸ்வாசம் வைக்கக் கூடாது. விஸ்வாசம் எவனிடத்தில் வைக்கப்படலாமோ அவனிடத்தில் அளவுக்கு மீறி விசு வாசம் வைக்கக் கூடாது. இது போன்ற விஸ்வாசத்தினால் பயம் ஏற்படுகிறது. (அது) ஒருவனை அடியோடு நாசமாக்குகிறது 145

ஒருவன் பெருமையை விட வேண்டும். மனைவியைக் காக்க வேண்டும். இனிதாகப் பேச வேண்டும். ஒருவன்

மனைவியிடம் பிரியமாகப் பேச வேண்டும். ஆனால் அவளது வசத்தில் விழுந்து விடக் கூடாது. 146

பூஜிக்கத் தகுந்தவர்களாகவும் புண்ணியசாலிகளாகவும், வீட்டிற்கே ஒளியைப் போல் உள்ளவர்களாகவும் விளங்கும் மனைவிகள் வீட்டின் செல்வம் ஆவர். ஆகையால் அவர்களை விசேஷமாகக் காக்க வேண்டும். 147

உள்ளறையைத் தந்தையின் மேற்பார்வைக்கும், சமையலறையை அம்மாவின் மேற்பார்வைக்கும், பசு மாட்டுக் கொட்டிலைத் தனக்குச் சமமானவனிடமும் கொடுத்து விட்டு தானே வயலைப் பார்த்துக் கொள்ள வேண்டும். 148

நற்குலத்தில் பிறந்த நல்லோர்கள் அக்னியைப் போல் தேஜஸ்விகளாக இருக்கின்றனர். பொறுமை இருப்பதனால் அவர்கள் விறகில் அக்னி இருப்பதைப் போல் மாறுதலடையாமல் சாந்தமாய் இருக்கின்றனர். 149

எந்த அரசனின் திட்டங்கள் மற்றோர்களாலோ தன்னிடம் இருப்பவர்களாலோ அறிந்து கொள்ளப்பட முடியாதோ அப்பேற்பட்டவன் தனது செழிப்பை நீண்ட காலம் அனுபவிக்கின்றான். 150

ஒருவன் என்ன திட்டம் போட்டிருக்கின்றானோ அதைப் பற்றி பேசக் கூடாது. எதைச் செய்துள்ளானோ அதை மட்டும் தெரியப்படுத்தலாம். 151

அறம், பொருள், இன்பம் ஆகிய இவைகளுடன் சம்பந்த

பட்ட செயல்களையும், தன் திட்டங்களைப் போல் (ஒருவன்) இரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டும். 152

மலையின் உச்சி, அரண்மனையின் மேல் பாகம் அல்லது மரம் இல்லாத தன்னந்தனியான இடத்திற்குப் போய் அங்கு ஒருவன் தன் திட்டங்களைப் போட வேண்டும். 153

கல்வியில்லாத நண்பனுக்கோ, கல்வியிருந்தும் புலன் அடக்கம் இல்லாத நண்பனுக்கோ இரகசியங்களைக் கூறக் கூடாது. 154

ஒருவனை நன்கு பரீட்சை செய்யாமல் தனது மந்திரியாக்கக் கூடாது. ஏனென்றால் அரசனின் செல்வங்களும் அவனுடைய இரகசியங்கள் காப்பாற்றப்படுவதும் அந்த மந்திரியையே சார்ந்துள்ளன. 155

எந்த அரசனின் அறம், பொருள், இன்பம் ஆகியவைகளுடன் சம்பந்தப்பட்ட எல்லாச் செயல்களும் செய்யப் பட்ட பின்பு தான் சபையில் உள்ளவர்களால் அறியப்படுகிறதோ, அப்படிப்பட்டவன் மன்னர்களில் சிறந்தவன். 156

எந்த அரசனின் திட்டங்கள் இரகசியமாய் உள்ளனவோ அவன் நிச்சயமாக வெற்றியைப் பெறுகின்றான். 157

எவன் அறியாமையாலும் தவறான காரியங்களைச் செய்கின்றானோ அவன் அக்காரியங்களின் கெட்ட பலன்

களினால் வாழ்வையே இழந்து விடுகிறான். 158

பாராட்டப்படும் செயல்களைச் செய்தால் இன்பம் உள்ளது. அவைகளைச் செய்யாமலிருந்தால் பரிவு ஏற்படுகிறது. 159

எப்படி வேதத்தை அத்யயனம் செய்யாதவன் சிராார்தத்தை நடத்தி வைக்க முடியாதோ அதே போல் ஆறு குணங்களை அறியாதவன் அரசுத் திட்டங்களைக் கேட்ப தற்குத் தகுதி உடையவன் அல்ல. 160

(1. பகைவர்களுக்கு வேண்டிய பொருள்களை அளித்து அவர்களுடன் நட்பு ஏற்படுத்திக் கொள்வது.

2. பகைவர்களுடைய நாட்டில் பலவிதமான துன்பங் களைத் தோற்றுவித்தல்.

3. பகைவர்களை அழிப்பதற்குப் படையுடன் புறப்படு தல். 161

4. தனது நாட்டில் அகழி, மதில், படை இவைகளை நன்கு பலமுள்ளதாகச் செய்து கொண்ட இருத்தல்.

5. பகைவர்களுக்குள்ளேயே பகைமையை ஏற்படுத்து தல். 162

6. தன்னுடைய பகைவர்களைக் காட்டிலும் மிக்க பலம் பொரந்திய ஒரு நண்பனைத் துணையாக அடைதல் ஆகியவை அந்த ஆறு குணங்கள்) 163

மன்னா! எவன் வளர்ச்சி, குறைவு, மிகுதி ஆகியவற்றை அறிந்துள்ளானோ, அந்த ஆறு குணங்களின் அறிவைப்

பெற்றுள்ளானோ, தன்னை அறிந்துள்ளானோ, எவனின் நன்னடத்தை பாராட்டப்பட்டுள்ளதோ அப்படிப்பட்டவனின் வசத்தில் உலகம் உள்ளது. 164

எவனது கோபமும், மகிழ்ச்சியும் வீணாக இருப்ப தில்லையோ, எவன் எதைச் செய்ய வேண்டுமோ அதைத் தானாக கவனிக்கிறானோ, எவன் பொக்கிஷத்தைத் தன் மேற்பார்வையில் வைத்துக் கொள்கிறானோ அவன் உலகம் அனைத்தையும் தன் கட்டுப்பாட்டில் வைத்தக் கொள்கி றான். 165

அரசன் தான் அடைந்த பெயரினாலும், (கொற்றக்) குடையினாலும் திருப்தி கொள்ள வேண்டும். அவன் செல் வத்தைத் தனக்கு சேவை செய்பவர்களுக்கு பிரித்தளிக்க வேண்டும். தானாகவே அனைத்தையும் எடுத்துக் கொள்ளக் கூடாது. 166

ப்ராஹ்மணன் மற்றொரு ப்ராஹ்மணனை அறிகின் றான். கணவன், மனைவியையும், அரசன் மந்திரியையும், அரசன் அரசனையும் அறிகின்றனா. 167

சாவு அளிக்கப்பட வேண்டிய எதிரி தன் வசத்திற்க வந்தால், அவனுககு விடுதலை கொடுக்கக் கூடாது. ஒரு வனுக்கு பலமில்லை என்றால் பலசாலியாயுள்ள எதிரியைத் திருப்திப்படுத்த வேண்டும். பலம் இருந்தால் கொலை செய்ய வேண்டும். 168

அவனை வதம் செய்யாமலிருந்தால் அவனிடமிருந்து

கூடிய விரைவில் பயம் ஏற்படுகிறது. தேவதைகள், அரசர்கள், சாதுக்கள், ப்ராஹ்மணர்கள், வயதானவர்கள், குழந்தைகள், நோயாளிகள், விஷயத்தில் முயற்சி செய்து கோபத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். 169

மூடர்கள் கலந்து கொள்ளும் வீண் சண்டைகளில் அறிவாளி கலந்து கொள்ளக் கூடாது. அவ்வாறு நடந்து கொண்டால் உலகில் புகழ் பெறுகின்றான். குறையை அடைவதில்லை. 170

எவனது அருள் பலனளிக்காது உள்ளதோ, எவனது கோபம் பலனளிக்காது உள்ளதோ, அத்தகையவனை மக்கள் எப்படி பெண்கள் நபும்ஸகனைக் (அலியை) கணவனாக விரும்புவதில்லையோ அதே போல் மன்னனாக்க விரும்புவதில்லை. 171

புத்தி செல்வத்தைப் பெறுவதற்காக இல்லை. ஜடத் தன்மை கஷ்டத்திற்குக் காரணமாகவும் இல்லை. அறிவாளி தான் உலகத்திலுள்ள வேற்றுமைகளை அறிகின்றான். மற்றவர்கள் அல்ல. 172

பாரதனே! கல்வி, நனனடத்தை, வயது, அறிவு இவை ஒவ்வொன்றிலும் பெரியவர்களை மூடன் அலட்சியப்படுத்துகிறான். 173

நன்னடத்தை இல்லாதவர்கள், அறிவில்லாதர்கள், பொறாமைப்படுபவர்கள், அதர்மத்தில் கெடுபவர்கள், கெட்ட வார்த்தைகள் பேசுபவர்கள், கோபமுடையர்கள்

ஆகியர்களுக்கு இடையூறுகள் சுலபமாக வருகின்றன. 174

வஞ்சகமில்லாதிருத்தல், தானம், பழகும் வழியை மீறாமலிருத்தல், அடங்கிய சொற்கள் முதலியவை எல்லாப் பிராணிகளையும் அடிமையாக்குகின்றன. 175

வஞ்சகமில்லாதவன், சாமர்த்தியசாலி, நன்றியுள்ளவன், புத்திசாலி மற்றும் நேர்மையாளனாக – எவன் உள்ளானோ அப்பேற்பட்டவனின் பொக்கிஷத்தில் ஒன்றுமில்லா விட்டாலும் அவன் (நண்பர்கள், உபதேசம் கொடுப்ப வர்கள், வேலைக்காரர்கள்) முதலிய பரிவாரங்களை அடை கிறான். 176

உறுதி, புலன்களை அடக்குதல், மனதை அடக்குதல், சுத்தம், கருணை, புண்படுத்தாத பேச்சு, நண்பர்களுக்குத் துரோகம் செய்யாமலிருத்தல் ஆகிய இவை எழும் செழிப்பு என்ற அக்னிக்கு 'ஸமித்' வடிவாகி உள்ளன. 177

அரசனே! எவன் மற்றொருவனுக்கு சல வேண்டியதை பிரித்துக் கொடுக்காமல் இருக்கிறானோ, தீயவனாய் இருக்கிறானோ, நன்றியில்லாதவனாய் இருக்கிறானோ, வெட்கமில்லாதவனாயிருக்கிறானோ அப்படிப்பட்டவனை அரசன் விட்டு விட வேண்டும. 178

எந்தக் குற்றவாளி நிரபராதிககுக் கோபத்தை உண்டாக்குகிறானோ, அவன் இரவில் தன் அறையில் பாம்பு இருந்தால் தூங்கக் கஷ்டப்படுவது போல் தூக்கமின்மையோடு இருப்பான். 179

பாரதனே! எவர்களைத் திட்டினால் தன் யோகக்ஷேமத் திற்கு ஊறு வருமோ அத்தகையோரைத் தேவதைகளைப் போல் திருப்திப்படுத்த வேண்டும். 180

எந்தப் பொருட்கள், ஸத்ரீகள், சலனமில்லாதவர்கள், ஜாதி தர்மத்திலிருந்து தவறியவர்கள், கெட்ட நடத்தை யுள்ளர்களை சார்ந்திருக்கிறதோ அவற்றைப் பற்றி எப்போ தும் சந்தேகம் இருந்து கொண்டுதானிருக்கும். 181

மன்னா! எவர்களுக்கு பெண்ணோ, வஞ்சனோ அல்லது குழந்தையோ வழிகாட்டியாக இருக்கின்றனரோ அவர்கள் கல்லில் செய்யப்பட்ட படகைப் போல் மூழ்கி விடு கின்றனர். 182

குறப்பிட்ட விஷயங்களில் மட்டும் கவனம் செலுத்தாமல் பொது விஷயங்களில் எவர்கள் கவனம் செலுத்து கின்றாரோ, அப்பேர்ப்பட்டவர்களை நான் பண்டிதன் என்று கருதுகின்றேன். ஏனென்றால் குறிப்பிட்ட விஷயங்கள் வந்து போகக் கூடியவை. 183

எந்த மனிதனை வஞ்சர்கள், கோமாளிகள், தீய பெண்கள் முதலியவர்கள் பாராட்டுகின்றனரோ அப்பேர்ப் பட்டவன் வாழும் மனிதனே அல்ல. அவன் உண்மையில் இறந்தவனைப் போல் தான் உள்ளான். 184

பாரதனே! அளவில்லாத சாமர்த்தியம் உடைய பெரிய வில்வித்தைக் கலைஞர்களான பாண்டவர்களை விட்டு விட்டு துரியோதனனிடம் இராஜ்யத்தின் பெரிய

ஐச்வர்யத்தை கொடுத்திருக்கிறீர். 185

ஆதலால் கூடிய சீக்கிரம் அந்த ஐச்வர்யத்தினால் மதம் அடைந்த மஹாபலி எப்படி மூன்று உலகங்களிலும் பிரஷ்டனாகி விட்டானோ அதேபோல் அவனது (துரியோதனனது) நாசத்தை நீர் காண்பீர். 186

## த்ருதராஷ்டிரர் கூறினார்

மனிதன் செழிப்பு அல்லது கஷ்டத்தைப் பெறச் சாமர்த்தியமுடையவனல்ல. அவன் நூல்களால் ஆட்டப்படும் மரப் பொம்மைகளைப் போல் உள்ளான். படைப்பவனால் அவன் விதியின் வசத்தில் வைக்கப்பட்டுள்ளான். நீங்கள் மேற் கொண்டு கூறுங்கள். நான் கவனத்துடன் கேட்டுக் கொண்டிருக்கிறேன். 187

## ஸ்ரீ விதுரர் கூறினார்

பாரதனே! பிரஹஸ்பதியும் பொருந்தாத வேளையில் ஏதாவது கூறினாலும் அவனுக்கு அறியாமை இருக்கிறது என்று பெயரும், அவமானமும் கிடைக்கும். 188

சிலர் தானம் கொடுத்துப் பிரியமாகின்றனர். மற்ற சிலர் மந்திரம் மற்றும் மூலிகைகளால் பிரியமாகின்றனர். ஆனால் எந்த சிலர் இயற்கையாகவே பிரியமாகவே உள்ளனரோ அவர்கள் எப்போதுமே அவ்வாறு உள்ளனர். 189

எவனை ஒருவன் வெறுக்கிறானோ அவனை ஒருவன்

நல்லவன் என்றோ அறிவாளி என்றோ பண்டிதன் என்றோ கருதுவதில்லை. ஒருவன் பிரியமானவனிடம் எல்லா நன்மையும் காண்கின்றான். எவனிடத்தில் வெறுப்பு உள்ளதோ அவனிடத்தில் ஒருவன் எல்லாவற்றையுமே தீயவைகளாகப் பார்க்கின்றான். 190

மன்னா! துரியோதன்ன் பிறந்த போதே நான் உன்னிடம், "இந்த ஒரு புதல்னை விலக்கி வை, அவனை விட்டதினால் உனது நூறு புதல்வர்களுக்கு நன்மை ஏற்படும். அவனைத் தியாகம் செய்யாததனால் நூற புதல்வர்களுக்கு நாசம்" என்று கூறினேன். 191

எந்த வளர்ச்சி நஷ்டத்தைத் தரகின்றதோ அதை வளர்ச்சி என்றே கருதக் விடாது. எந்த நஷ்டம் வளர்ச்சியைத் தருகிறதோ அதை உயர்ந்தது என்று கருத வேண்டும். 192

பேரரசே! எந்த நஷ்டம் வளர்ச்சியைத் தருகின்றதோ அது நஷ்டமே இல்லை. எந்த நஷ்டம் அதிக நாசத்தை ஏற்படுத்துகிறதோ அதை இங்க நிச்சயமாக நஷ்டம் என்றே கருத வேண்டும். 193

சிலர் குணங்களினால் கீர்த்தி பெறுகின்றனர். மற்ற சிலர் செல்வத்தினால் கீர்த்தி பெறுகின்றனர். எவர்களுக்கு செல்வமிருந்தாலும் நற்குணங்களில்லையோ அவர்களை விட்டு விடுங்கள். 194

# ஸ்ரீ விதுரர் அருளும் நீதி மொழிகள்

## த்ருதராஷ்டிரர் கூறினார்

எனக்கு எது நல்லதைத் தருமோ அத்தகைய அறிவுக்குப் பொருந்திய சொற்களை நீர் என்னிடம் பேசுகின்றீர். எங்கு தர்மம் உள்ளதோ அங்கு வெற்றி உள்ளது. அவ்வாறிருந் தாலும் எனது புதல்வனை தியாகம் செய்வது என்னால் பொறுக்க முடியாது. 195

## ஸ்ரீ விதுரர் கூறினார்

எவனுக்கு உயர்ந்த நற்குணங்கள் இருக்கின்றனவோ, மேலும் தாழ்ணுமையும் உள்ளதோ அவன் மற்ற உயிர்கள் சிறிதளவுக்குக் கஷ்டப்பட்டாலும் அதை அலட்சியப்படுத்த மாட்டான். 196

எவர்கள் பிறரைக் குறை சொல்வதில் ஈடுபட்டிருக்கின் றனரோ மேலும் பிறருக்கு துன்பம் உண்டாக்குவதில் ஈடபட்டு உள்ளார்களோ, அப்படிப்பட்டவர்கள் எப்போதும் ஒருவருக்கொருவர் சண்டை போடுவதிலேயே ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். 197

எவனைப் பார்த்தாலேயே குற்றம் ஏற்படுமோ மேலும் எவனோடு சேர்ந்து வாழ்ந்தால் பெரிய பயமேற்படுமோ அப்பேர்ப்பட்டவனிடமிருந்து தானம் வாங்கினால் அது பெரிய குற்றமாகும். மேலும் அத்தகையவனுக்குத் தானம் செய்தால் அது பயத்தையே தரும். 198

எவர்கள் பிளவு உண்டாக்கும் இயற்கை உள்ளவர்களோ ஆசை உள்ளவர்களாக இருக்கின்றார்களோ, வெட்க

மில்லாமல் இருக்கின்றார்களோ, வஞ்சகர்களாய் இருக்கின் றார்களோ, மேலும் எவ்ர்கள் பாவிகள் என்று பெயர் பெற்றிருக்கின்றார்களோ அப்பேர்ப்பட்டவர்களிடம் நட்புக் கொள்வது எப்போதும் நிந்திக்கப்பட்டுள்ளது. 199

எந்த மனிதர்கள் இதைப் போல் மற்ற குற்றங்களுடையவர்களாக இருக்கின்றார்களோ அவர்களை விட்டு விட வேண்டும். நிசமானவனுடன் நட்பிற்குக் காரணம் நீங்கி விட்டால் அவர்கள் விஷயத்தில் அன்பும் போய் விடும். 200

அதே போல் அந்த நட்பின் பலனும் நட்பினால் ஏற்பட்ட சுகமும் நீங்கி விடும். நட்பு நீங்கிய பின் எவன் முதலில் நண்பனாயிருந்தவனைக் குறை சொல்லிக் கொண்டி ருக்கின்றானோ மேலும் முதலில் நண்பனாயிருந்தவன் மேல் எதாவது தீங்கிழைக்கப் போனால் அந்த நண்பன் சிறிதளவு துன்பம் அனுபவித்தாலும் துன்பத்தைக் கொடுத்தவன் அமைதி அடைவதில்லை. 201

அறிவாளியானவன் எல்லாவற்றையும் ஆராய்ந்து அவற்றைப் பற்றிச் சிந்தித்து மேற்சொல்லப்பட்ட துஷ்டர்க ளின் நட்பை தூரத்திலிருந்தே விட்டு விட வேண்டும். 202

எவன் திக்கற்றவனாயும், நோயாளியாயும், செல்வ மில்லாதவனாகியும் உள்ள உறவினர்களை அனுக்ரஹம் செய்கின்றானோ அப்பேர்ப்பட்டவன் புதல்வன் மற்றும் பசுக்களின் வளர்ச்சியை அடைகின்றான். முடிவில்லாத நன்மையைப் பெறுகின்றான். 202

எவன் தனது நன்மையையும், குல வளர்ச்சியையும் விரும்புகின்றானோ அப்பேர்ப்பட்டவன் உறவினர்களின் வளத்தை ஏற்படுத்த வேண்டும். ஆதலால் மன்னாதி மன்னா! நல்லவற்றை மேற்பொள்வீராக. 204

எவன் உறவினர்களுக்கு நன்மையைச் செய்கின்றானோ அப்பேர்ப்பட்டவன் செழிப்பை அடைகிறான். 205

பரதர்களில் காளையே! உறவினர்களுக்கு நற்குணங்கள் இல்லாவிட்டாலும் அவர்களை இரட்சிக்க வேண்டும். ஆகவே நற்குணங்களிருப்பவர்களாகவும் உமது ஆசியை விரும்புபவர்களாகவும் இருப்பவர்களைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? 206

மன்னரே! வீரர்களாகிய பாண்டவர்களுக்கு நன்மை செய்வீர்! நாயகரே! அவர்களின் ஜீவனத்திற்காக அவர்களுக்குக் கிராமங்களைக் கொடுப்பீராக! 207

அரசரே! அவ்வாறு செய்தால் புகழ் கிடைக்கும். தந்தையே! வயதானவராகிய தங்கள் மூலமாக தங்கள் புதல்வர்கள் அடக்கத்தை சாதிக்க வேண்டும்! 208

நான் உமக்கு நன்மையைக் கூற வேண்டும். என்னை, உம் நன்மையை விரும்புபவனாகத் தெரிந்து கொள்வீராக. தந்தையே! நன்மையை விரும்புவதனால் உறவினர்களுக்கு பிரிவு ஏற்படுத்தக் கூடாது. 209

பரதர்களில் காளையே! உறவினர்களுடன் சேர்ந்து

இன்பங்களை அனுபவிக்க வேண்டும். அவர்களோடு சேர்ந்து சாப்பிட வேண்டும். சேர்ந்து பேச வேண்டும். அன்யோன்யமாய் இருக்க வேண்டும். பகைமை எக்காலத்திலும் காட்டக்கூடாது. 210

உறவினர்கள் இங்கு இரக்ஷிக்கின்றனர். உறவினர்கள் அழிவையும் தருகின்றனர். நன்னடத்தை உள்ள உறவினர்கள் காப்பாற்றுகின்றனர். கெட்ட நடத்தை உள்ளவர்கள் கெடுதலைத் தருகின்றனர். 211

மன்னாதி மன்னா! ஸன்மானங்களைத் தருபவரே! பாண்டவர்களிடம் நேர்மையோடு நடந்து கொள்வீராக! அவர்களுடன் நீர் சேர்ந்திருந்தால் எதிரிகள் உம்மை வெல்ல முடியாது!. 212

செல்வந்தனாகிய உறவினர்களைக் கண்டு மற்றொரு உறவினன், அம்பைக் கையில் வைத்திருக்கும் வேடனைக் கண்டு மான் பயப்படுவதைப் போல் பயப்பட வேண்டியதாக இருந்தால், அச்செல்வந்தன், பயப்படுபவனின் பாவத்தை அடைகிறான். 213

பாண்டவர்களோ அல்லது உமது புதல்வர்களோ கொல்லப்பட்டனர் என்று கேட்டு நீர் பிறகு தாபப்பட வேண்டி வரும். மனிதர்களில் உயர்ந்தவரே! அதைச் சிந்தித்துப்பாருங்கள். 214

எச்செயல்களைச் செய்பதினால் பின்னால் துன்பத்தின் இல்லத்திற்குச் சென்று கஷ்டப்பட வேண்டியதாக இருக்

குமோ, நிலையில்லாத வாழ்வை மனதில் வைத்துக் கொண்டு அத்தகைய செல்களைச் செய்யாமலிருப்பீராக! 215

சுக்ரரைத் தவிர வேறு யாரும் தவறு செய்யவில்லை என்பது கிடையாது. மற்றோரும் தவறிழைக்கின்றனர். அப்படியிருக்கையிலும் பித்திசாலிகள் எந்த நல்ல காரியத்தைச் செய்ய வேண்டும் எனச் சிந்திக்கின்றனர். 216

அரசே! துரியோதனனால் பாண்டவர்களுக்கு எத்தவறு நடந்ததோ, குலத்திலேயே வயதானவரான உங்களால் அது சரிப்படுத்தப்பட வேண்டும். 217

மனிதர்களில் உயர்ந்தவரே! பாண்டவர்களை இராஜ்யத்தில் ஸ்தாபனம் செய்தால் நீர் உலகியல் குற்றமற்றவனாகி விடுவீர்கள். நல்லோர்கள் உம்மை ஆதரிப்பார்கள். 218

தீரர்களின் நல்ல சொற்களையும் அதன் பலன்களையும் நன்கு சிந்தித்து எவன் செயல்களைச் செய்கிறானோ அவன் நீண்ட காலம் செழிப்பை அடைகிறான். 219

திறமைசாலிகளால் உபதேசிக்கப்பட்ட ஞானமும் அதிமாகப் பயன்படுவதில்லை. ஏனெனில் அது நன்கு புரிந்து கொள்ளப்படுவதில்லை. நன்கு புரிந்து கொள்ளப்பட்டாலும் அது நன்கு அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படுவதில்லை. 220

# ஸ்ரீ விதுரர் அருளும் நீதி மொழிகள்

எவன் பாவத்தின் பலத்தை அறிந்து பாவங்களைச் செய்வதில்லையோ அத்தகையாவன் வளர்ச்சி பெறுகிறான். 221

எவன் தான் முன்பு செய்த பாவத்தைப் பற்றி சிந்திக்காமல் மீண்டும் பாவத்தைச் செய்கின்றானோ அப்பேர்ப்பட்டவன், ஆழம் கண்டுபிடிக்க முடியாத சேற்றில் விழுந்துவிடுகிறான். 222

அறிவுடையவன், திட்டங்கள் வெளித் தெரியப்படும் ஆறு வழிகளை அறிந்துகொள்ள வேண்டும். 223

எவன், செல்வம் எப்போதும் வளர வேண்டும் என விரும்புகிறானோ அவன் பின் வரும் ஆறு குணங்களைக் கவனத்துடன் பின்பற்ற வேண்டும். மதம், தூக்கம், பிறரின் இரகசிய காரியங்களை அறியாமலிருப்பது, உருவம், கெட்ட மந்திரியின் மேல் வைக்கப்பட்ட நம்பிக்கை, திறமையில்லாத தூதர்கள் ஆகிய இரகசியம் வெளித்தரும் வழிகளில் கவனத்துடன் உள்ளானோ அத்தகைய தர்ம, அர்த்த, காமங்களை அனுஸரிப்பவன் எதிரிகளை வெல்கிறான். 224

சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவற்றை அறிந்து கொள்ளாமலும் மேலும் பெரியோர்களுக்கு சேவை செய்யாமலும் இருந்தால், பிரஹஸ்பதிக்குச் சமமாக இருப்பவர்களாலும் தர்மத்தையும் அர்த்தத்தையும் அறிந்து கொள்வது சாத்தியமில்லை. 225

சமுத்திரத்தில் விழுந்தது கிடைக்காது. அதேபோல் கவனிக்காமல் இருப்பவனிடம் சொல்லப்பட்ட வார்த்தைகள் வீண் ஆகும். 226

அடக்கமில்லாதவர்களிடம் சாஸ்திரம் நஷ்டமாகிவிடும். அதேபோல் அக்னி இல்லாத இடத்தில் போடப்படும் 'ஹவிஸ்' வீணுகிவிடும். 227

அறிவாளியானவன் மனதால் சிந்தித்து மீண்டும் மீண்டும் ஆராய்ந்து புத்தியின் மூலமாக அனுபவத்தை அடைந்து நிச்சயம் செய்து காதுகளால் கேட்டு, கண்களால் பார்த்து ஒரு தீர்மானத்திற்கு வந்து அறிவாளிகளுடன் நட்பு வைத்துக் கொள்ள வேண்டும். 228

பணிவு — புகழ் இல்லாமையை அழிக்கிறது. பராக்கிரமம் தோல்விகளை நீக்குகிறது. பொறுமை எப்போதும் கோபத்தை நீக்குகிறது. நன்னடத்தை கெடுதல்களின் சின்னங்களை நீக்குகிறது. 229

மன்னு! போகப் பொருட்களால், தான் பிறந்த இடத்தால், தன் இல்லத்திஞல் மற்றும் தனது ஆசாரத்திஞல், உணவிஞல், ஆடையிஞல் ஒருவனது குலத்தை ஆராயலாம். 230

முன்ஞல் இருக்கும் போகப் பொருட்களை உடலில் அபிமானம் இல்லாதவஞல்கூட விட முடியாது. இப்படி இருக்கையில் காமத்தில் பற்றிருப்பவனை என்ன கூறவேண்டியிருக்கிறது? 231

அறிவாளிகளைச் சேவிப்பவன், அறிவாளி, அறத்தில் ஈடுபாடு உடையவன், இனிமையாக இருப்பவன், நண்பன், மெல்லிய பேச்சு, நல்ல உள்ளம் கொண்டவன் அப்பேர்ப் பட்ட ஒருவனை ரக்ஷிக்க வேண்டும். 232

கெட்ட குலத்தில் வந்தவனுயிருந்தாலும் நன்னடத்தையை மீறி நடக்காதவன், தர்மத்தில் கவனம் செலுத்துபவன், மிருதுவானவன், வெட்கமுடையவன் இவ்வாறு இருப்பவன் 100 நற்குலத்திற்குச் சேர்ந்தவர்களைக் காட்டிலும் உயர்ந்தவன். 233

எவர்களின் அறிவு, இரகசியமான செய்கைகள், சாமர்த்தியம் இவை சமமாக இருக்கின்றனவோ அவர்களின் நட்பு என்றும் குறைவதில்லை. 234

அறிவாளி, மூடனாகிய துஷ்டனை புல்லால் மூட்பட்ட கிணற்றைப் போல் விட்டுவிட வேண்டும். ஏனென்றால் அவனுடன் வைத்துக் கொண்ட நட்பு நாசமாகிவிடும். 235

கர்வமுடையவன், மூடன், பயங்கரமாக இருப்பவன், கவனமில்லாமல் காரியம் செய்பவன், தர்மத்தை விட்டவன் ஆகிய இவர்களுடன் புத்திமான நட்பு வைத்துக் கொள்ளக் கூடாது. 236

நன்றியுடையவன், தர்மத்தில் ஈடுபாடு வைப்பவன், பெருந்தன்மை உடையவன், உறுதியான பக்தி உள்ளவன், புலன்களை வென்றவன், ஸ்திரமாய் இருப்பவன், நட்பை விடாதவன் – இவ்வாறு இருப்பவனை நண்பனுக வைத்துக்

கொள்ள விரும்ப வேண்டும். 237

புலன்களை அவைகளின் பொருட்களிலிருந்து தடுப்பது மிகவும் கடினமானது. 238

பொருட்களுடன் புலன்களுக்கு உள்ள அதிகமான சம்பந்தம், தேவதைகளையே கெடுத்துவிடும். 239

தாழ்மை, எல்லா உயிர்கள் விஷயத்திலும் பொறாமை இல்லாதிருப்பது, பொறுமை, நண்பர்கள் விஷயத்தில் மரியாதை – இவைகள் ஆயுளை அதிகப்படுத்துகின்றன என்று அறிஞர்கள் கூறுகின்றனர். 240

எவன், முன்பு அடைய முடியாததை நேர்மையின் மூலமாக அடைவதற்கு திடமான தீர்மானத்துடன் முயற்சி செய்கிறானோ அப்பேர்பட்டவனுக்கு உண்மையான ஆண்மை உள்ளது. 241

வரப்போகும் காலத்தில் எந்தப் பரிகாரங்களெல்லாம் செய்ய வேண்டும் என்று அறிந்தவன், இக்காலத்தில் தீர்மானத்தோடு இருப்பவன். செய்த செயல் எவ்வாறு முடியும் என யூகிப்பவன், அவன் தான் சாதிக்க விரும்பியவற்றைச் சாதிப்பான். 242

செயல், மனம், வாக்கால் மனிதன் எதை அநுஸரிக்கிறானோ அதை அவர் அடைகிறான். ஆதலால் ஒருவன் நன்மையைச் செய்ய வேண்டும். 243

நன்மையை அடைந்த பின்னும் முயற்சி செய்வது, காலம்,இடம், வழி முதலியவற்றிற்குத் தகுந்தவாறு எவ்வாறு இருப்பது என அறிவது, சாஸ்திரத்துடன் பரிச்சயம், முயற்சி, நேர்மை, நல்லோர்களின் சந்திப்பு இவை வளத்தைத் தருகின்றன. 244

மனக்கலக்கமில்லாமல் செயலைச் செய்வது செல்வம் இலாபம் மற்றும் நலனின் வேராகும். 245

மனக்கலக்கமில்லாமல் செயல்களைச் செய்பவன் உயர்ந்தவனுகின்றான். அளவில்லாத இன்பத்தையும் பெறுகின்றான். 246

தந்தையே! எல்லா இடங்கிளலும், எல்லாக்காலத்திலும், பொறுமைக்குச் சமானமாக இன்பத்தைக் கொடுக்கக் கூடியதும், சக்தியுடைய மனிதனுக்குத் தகுந்தது வேறில்லை. எவனுக்கு வெற்றியும் தோல்வியும் சமமாக உளதோ அவன் எப்போதுமே பொறுமையானவன். 247

எந்த இன்பத்தைச் சேவித்துக் கொண்டிருந்தால் அறமும் பொருளும் விட்டுப் போவதில்லையோ அதை எவ்வளவு வேண்டுமானுலும் அனுஸரிக்கலாம். மூடனைப்போல அடக்க மில்லாமல் இருக்கக் கூடாது. 248

எவன் துன்பத்திஞல் கஷ்டப்படுகின்ருனே, கெட்டப் பழக்கங்களுள்ளானே, நாஸ்திகனுய் உள்ளானே, எவனுடைய வசத்தில் புலன்களில்லையோ, எவனுக்கு உற்சாகம் இல்லையோ அப்பேர்பட்டவனிடம் செழிப்பு

இருப்பதில்லை. 249

எந்த மனிதன் நேர்மையுடன இருக்கிறானோ, நேர்மையால் அடக்கம் உடையவனாய் உள்ளானோ, அத்தகையவனைத் துஷ்டர்கள் 'சாமர்த்தியமில்லாதவன்' என்று கருதித் துன்பப்படுத்துகின்றனர். 250

மிகவும் நேர்மையுடனிருப்பவன், அதிகமாய்த் தானம் செய்பவன், மிகுந்த சூரன், உயர்ந்த விரதங்களை அனுஸரிப்பவன், தன்மை அறிவாயி என்ற நினைத்துக் கொண்டிருப்பவன் ஆகியவர்களிடம் செழிப்பு, பயத்தினால் செல்வதில்லை. 251

அதிகமான நற்குணங்கள் உடையவனிடமோ, குணங்களில்லாதவனிடமோ செழிப்பு இருப்பதில்லை. அது நற்குணங்களை விரும்புவதில்லை, குணங்களே இல்லாமலிருப்பதையும் விரும்புவதில்லை. 252

கண்பார்வை இல்லாத பைத்தியம் பிடித்த மாட்டைப் போல் சிலரிடம் தான் (செழிப்பு) அது இருக்கிறது. 253

வேதங்களுக்கு அக்னிஹோத்ரம் போன்ற கர்மாக்கள் பலனாய் உள்ளன. நல்ல குணமும், ஆசாரமும் சாஸ்திரங்களை அறிந்ததின் பலன்கள் ஆகும். 254

மனைவியின் பலன் சம்போகத்தின் இன்பமும், புத்திரனும் ஆகும். போகமும், தானமும், செல்வத்தின் பலனாய் உள்ளன. 255

எவன் நியாயமாய் அடையாத செல்வத்தின் மூலமாக செத்த பின் செழிப்படைய நற்செயல்களைச் செய்கிறானோ அப்பேர்ப்பட்டவன் அந்த உலகில் தனது செலவ்களின் பலன்களை, செல்வம் பெறுவதற்குச் செய்த பாவத்தினால் அடைவதில்லை. 256

பாலைவனத்தில், காட்டில், கஷ்டங்களில், வறட்சியில், ஆயுதத்தைத் தூக்கிக் கொண்டு நிற்கையில் – இச் சமயங்களில் கூட மனவடக்கம் உள்ளவனுக்கு பயம் கிடையாது. 257

முயற்சி, அடக்கம், சாமர்த்தியம், கவனம், உறுதி, ஞாபக சக்தி, கவனித்து செயல்களைத் தொடங்குவது ஆகிய இவை செழிப்பிற்குக் காரணமாக உள்ளன. 258

தவம் – தவம் புரிபவர்களின் பலம்
வேதம் – வேதம் அறிந்தவரின் பலம்
துன்பம் கொடுப்பது – துஷ்டர்களின் பலம்
பெருமை – குணசாலியின் பலம்

259

எதை ஒருவன் தனக்குப் பிரதிகூலமாகக் (கெடுதல் தருவதாகக்) கருதுகின்றானோ அதைப் பிறனொருவ னுக்குச் செய்யக் கூடாது. 260

சுருக்கமாகச் சொன்னால் இதுதான் தர்மம். இதைக் காட்டிலும் வேறான அதர்மம் கர்மத்தினால் ஏற்படுகிறது. கோபமின்மையால் கோபத்தை வெல்ல வேண்டும். நன்மை யால் தீயவர்களை வெல்ல வேண்டும்.

கஞ்சனைத் தானத்தின் மூலம் வெல்ல வேண்டும். பொய்யை உண்மையால் வெல்ல வேண்டும். 261

பெண், வஞ்சகன், சோம்பேறி, பயந்தவன், கோபக்காரன், தன்னை உயர்ந்தவன் என்று நினைப்பவன், திருடன், நன்றியில்லாதவன், நாஸ்திகன் ஆகிய இவர்களிடம் நம்பிக்கை வைத்துக் கொள்ளக் கூடாது. 262

யாவன் பெரியவர்களை தினந்தோறும் நமஸ்கரிக்கின்றானோ அத்தகைய பண்புள்ளவனுக்கு கீர்த்தி, ஆயுள், சாதனை பலம் முதலிய நான்கும் நன்கு வளர்கின்றன. 263

மிகுந்த கஷ்டப்பட்டு அல்லது தர்மத்தை மீறி எதைச் சாதிக்க வேண்டியிருக்கிறதோ அவ்விஷயங்களில் மனதை வைக்காதீர். 264.

அத்யயனம் செய்யாமலிருப்பது, வேதங்களின் களங்கம். விரதத்தை அனுஷ்டிக்காமலிருப்பது ப்ராஹ்மணனின் களங்கம். 265

வல்லீகர்கள் உலகின் களங்கம் போன்றவர்கள். பொய் மனிதனின் களங்கம். தெரிந்து கொள்ளும் ஆவல் பதிவிரதைப் பெண்களின் களங்கம். வீட்டைவிட்டு வெளியே போவது சாமான்யப் பெண்களின் களங்கம். வெள்ளி தங்கத்தின் களங்கம். ஈயம் வெள்ளியின் களங்கம். காரீயம் ஈயத்தின் களங்கம். காரீயத்தின் களங்கம் அழுக்கேயாகும். 266

தூக்கத்தின் மூலமாக (படுப்பதால்) தூக்கத்தை வெல்ல முடியாது. காமத்தினுல் பெண்களை வெல்ல முடியாது. நெருப்பை விறகினுல் வெல்ல முடியாது. குடிப்பதினால் கள்ளை வெல்ல முடியாது. 267.

தானத்தின் மூலமாக எவன் சினேகிதர்களை வென்றுள்ளானே எவன் எதிரிகளைப் போரில் வென்றுள்ளானோ, மனைவியை உணவு, பானத்தின் மூலமாக வென்றுள்ளானே அப்பேர்பட்டவனுடைய வாழ்வு பயனுள்ளதாகும். 268

ஆயிரம் (பொருள்) இருப்பவர்களெல்லாம் வாழ்கின்றனர். நூறு இருப்பவர்களும் வாழ்கின்றனர். த்ருதராஷ்டிரா! ஆசையை விட்டுவிடு. ஒருவன் எதை வைத்துக் கொண்டாலும் வாழ்வை நடத்தி விடலாம். 269

பூமியில் நெல், பொன், பசுக்கள், பெண்கள் ஆகிய இவைகளை வெல்லலாம். இருந்தாலும் ஒருவனும் திருப்தியடைவதில்லை. இதைக்கண்டு அறிவாளி மோஹம் அடைவதில்லை. 270

மன்னு! மீண்டும் கூறுகின்றேன். உமக்கு உம் புதல்வர்கள்– மற்றும் பாண்டுவின் புத்திரர்கள் விஷயத்தில் சமமான பாவனை இருக்கிறதென்றால் அவர்களிடம் தகுந்த வகையில் நடந்து கொள்வீராக. 271

## ஸ்ரீ விதுரர் கூறியது

நல்லோர்களால் பூஜிக்கப்பட்டு அபிமானமில்லாமல்

தனது சக்திக்கேற்ப காரியங்களைச் செய்து வருபவனுக்கு கூடிய சீக்கிரமே புகழ் வருகின்றது. நல்லோர்கள் திருப்தி அடைந்தால் இன்பத்தைத் தர அவர்களுக்குத் திறமை யிருக்கிறது. 272

எவன் மற்றவர்கள் கூறாவிட்டாலும், அதர்மத்தோடு கூடிய உயர்ந்த பொருளையும் விட்டு விடுகின்றானோ அவன் பாம்பு தன் சட்டையை விடுவது போல் எல்லாத் துன்பங்களையும் விட்டுவிட்டு இன்பத்தோடு வாழ்கிறான். 273

பொய்யால் கிடைத்த வளர்ச்சி, பொறுமையால் அரசனை எதிர்த்தல், குருவுக்கு முன் அசிரத்தையுடம் தீர்மானித்தல்– இவைகள் பிரம்மஞானியை வதம் செய்வ தற்குச் சமமாய் உள்ளன. 274

அதிகமான பொறுமை, மரணம் மற்றும் தற்புகழ்ச்சி செழிப்பின் அழிவுக்கு காரணமாய் உள்ளன. குருவை நன்கு சேவிக்கால் இருப்பது, அவசரப்படுவது, தற்புகழ்ச்சி ஆகிய மூன்றும் கல்வியின் எதிரிகளாய் உள்ளன. 275

சோம்பல், மதம், மோகம், சபலம், காலத்தை வீணுக்குவதற்காக சேர்வது, தான் பெரியவன் என்று நினைப்பது, கர்வம், பேராசை ஆகிய இந்த ஏழும் வித்யார்த்திகனின் (மாணுக்கனின்) குற்றங்கள் என்று கருதப்பட்டுள்ளன. இன்பத்தை விரும்புபவனுக்கு கல்வி எப்படி கிடைக்கும்? கல்வியை விரும்புபவனுக்கு சுகம் எப்படி கிடைக்கும். 276

## ஸ்ரீ விதுரர் அருளிய நீதிமொழிகள்

சுகத்தை விரும்பினால் கல்வியை விட்டுவிட வேண்டும், கல்வியை விரும்பினால் சுகத்தை விட்டுவிட வேண்டும். விறகுகளினால் அக்னி திருப்தியடைவதில்லை, நதிகளினால் சமுத்திரம் திருப்தி யடைவதில்லை, மனிதர்களினால் தீய பெண் திருப்தியடைவதில்லை. 277

அரசே! ஆசை உறுதியை நாசம் செய்கிறது (உறவினர்களின்) வளர்ச்சியை யமன் நாசம் செய்கிறான், செல்வத்தை கோபம் நாசம் செய்கிறது, கஞ்சத்தனம் புகழை நாசம் செய்கிறது, கவனக் குறைவு பசுக்களை நாசம் செய்கிறது, கோபமடைந்த ஒரு பிரம்ம ஞானி அரசையே அழிக்கின்றான். 278

ஆடுகள், பித்தளை, வெள்ளி, தேன், விஷ முறிப்பு மருந்துகள், பறவை, சாஸ்திரத்தை அறிந்தவர்கள், வயதான உறவினன், இப்போது கஷ்டப்படும் நற்குணத்தினன் ஆகிய இவர்கள் உம் வீட்டில் எப்போதுமிருக்கட்டும். 279

ஆடு, காளை, சந்தனம், வீணை, கண்ணாடி, தேன், நெய், இரும்பு, செம்பு, சங்கு, விஷ்ணுவைக் குறிக்கும் தங்கத்தோடு கூடிய கல், கோரோஜனை. 280

பாரதரே! மங்களகரமான இவைகளை, தேவதைகள், ப்ராஹ்மணர்களின் விருந்தினர்கள் ஆகியவர்களை உபசாரம் செய்வதற்காக வீட்டில் வைத்திருக்க வேண்டும் என்று மனு கூறியுள்ளார். 281

இப்போது நான் உமக்கு எல்லாவற்றைக்காட்டிலும் உயர்ந்ததைக் கூறுகின்றேன். புண்ணியம் மிக உயர்ந்தது. காமத்தினாலோ, பயத்தினாலோ, லோபத்தினாலோ எந்தக் காலத்திலும் உயிருக்காக்கூட தர்மத்தை விடக்கூடாது. 282

தர்மம் நிலையானது. சுகமும், துக்கமும் நிலையற்றது. ஜீவன் நிலையானது. அதன் அவஸ்தைகள் நிலையற்றன. நீங்கள் நிலையற்றதை விட்டு விட்டு நிலை பெற்றதிலேயே திருப்தியோடு இருங்கள். திருப்தியே உயர்ந்த இலாபம். 283

பலசாலியான மஹான்கள் செல்வமும், நெல்லும் கூடிய பூமியை ஆண்டனர். அந்த அரசர்களும் இராஜ்யங்களையும் உயர்ந்த போகங்களையும் விட்டுவிட்டு எமனின் வசத்திற்குச் சென்று விட்டனர். 284

அரசே! மனிதர்கள் துக்கத்தோடு, செத்த புதல்வனை வீட்டிலிருந்து தூக்கிக் கொண்டு போய் தலைவிரி கோலமாய் அழுதுகொண்டு சுடுகாட்டு நெருப்பில் விறகைப் போல் போட்டுவிடுகின்றனர். 285

வேறொருவன் செத்தவனின் சொத்தை அனுபவிக்கிறான், பறவைகளும் அக்னியும் அவனது உடலின் தாதுக்களை அனுபவிக்கின்றன. புண்ணியமும் பாவமும் கூடிய இவன் அவ்விரண்டுடன் பரலோகத்திற்குச் செல்கிறான். 286

தந்தையே! பூவும், பழங்களும் இல்லாத மரங்களை பக்ஷிகள் விடுவதைப் போல், சுடுகாட்டில் உறவினர்கள்,

நண்பர்கள் மற்றும் புதல்வர்கள் ஒரு மனிதனை விட்டுவிடுகின்றனர். 287

அக்னியில் அடப்பட்ட மனிதனோடு அவன் செய்த தர்மம் வருகின்றது. ஆதலால் மனிதன் முயற்சி செய்து சிறிது சிறிதாக தர்மத்தை சேர்த்துக் கொள்ள வேண்டும். 288

பாரதரே! ஜீவன் என்னும் நதிக்கு புண்ணியம் என்னும் தீர்தஸ்தலங்கள் உள்ளன. உள்ளம் அதன் நீர். உறுதி அதன் கரைஇ கருணை அதிலுள்ள அலைகள், அதில் குளித்த புண்ணியசாலி சுத்தமாகின்றான். ஆத்மா புண்ணிய வடிவாகவே உள்ளது. பேராசை இல்லாதிருப்பதும் புண்ணியமாகும். 289

ஐம்புலன்களை நீராக கொண்ட ஆற்றில் காமம் மற்றும் கோபம் என்னும் முதலைகள் உள்ளன. உறுதியைப் படகாக ஆக்கிக் கொண்டு, பிறப்பி என்னும் சுழல்களைக் கடந்து செல்வீராக. 290

அறிவில் உயர்ந்தவன், தாமத்தில் உயர்ந்தவன், தன் உறவினன், கல்வியில் உயர்ந்தவன், வயதாலும் உயர்ந்தவன் ஆகியோரை எவன் உபசரித்துத் திருப்திப்படுத்தி எது சரி, எது தவறு என்று கேட்கின்றானோ அவன் ஒரு போதும் மோஹத்தை அடைவதில்லை. 291

ஆண் குறியையும் வயிற்றையும் உறுதியால் காக்க வேண்டும். காலையும், கையையும் கண்களால் காக்க

வேண்டும். கண்ணையும், காதையும் மனதால் காக்க வேண்டும். மனதையும் சொற்களையும் செயல்களால் காக்க வேண்டும். 292

தினந்தோறும் தகுந்த காலத்தில் ஸ்நானம் செய்பவனும், எப்போதும் பூணூலை அணிந்து கொண்டிருப்பவனும், தினமும் வேதத்தை அத்யயனம் செய்பவனும், தூய்மையற்ற உணவை தவிர்ப்பவனும், உண்மையைப் பேசுபவனும், குருவின் ஸேவையைச் செய்பவனும் ஆன ப்ராஹ்மணன் ப்ரஹ்மலோகத்திலிருந்து நழுவுவதில்லை. 293

வேதங்களை அத்யயனம் செய்பவனும், அக்னியில் ஹவிஸ்ஸைப் போடுபவனம், யாகங்களைச் செய்பவனும், பிரஜைகளை இரட்சிப்பவனும், பசுக்களையும், ப்ராஹ் மணர்களையும் காப்பவனும், கடைசியில் போரில் மரணத்தைத் தழுவும் க்ஷத்திரியனும் ஸ்வர்கத்தை அடைகிறார்கள். 294

வேதத்தை அத்யயனம் செய்பவனும், ப்ராஹ்மணர்கள், க்ஷத்திரியர்கள் மற்றும் தன்னை நம்பியவர்களுக்கு தன் செல்வத்தைத் தகுந்த காலத்தில் அளிப்பவனும், மூன்று அக்னிகளால் புனிதமாக்கப்பட்ட புகையை முகர்பவனும் ஆன வைச்யன் மறைந்த பின் ஸ்வர்கத்தில் தைவீகமான இன்பங்களை அனுபவிக்கிறான். 295

ப்ராஹ்மணன், க்ஷத்திரியன், வைச்யன் ஆகியவர்களைக் கிரமமாக நியாயமான வழியில் உபசரித்து அவர்களைத்

திருப்திப்படுத்தி, தனது பாவங்களைப் போக்கிக் கொண்டு, கஷ்டமில்லாமல் உடலை விட்டு வேளாளன் ஸ்வர்கத்தில் உள்ள சுகங்களை அனுபவிக்கிறான். 296

என்னால் உமக்கு நான்கு வர்ணங்களை சேர்ந்த தர்மங்கள் காட்டப்பட்டன. அவ்வாறு கூறப்பட்டதற்கான காரணத்தை கேட்பீராக. பாண்டவின் புதல்வன் க்ஷத்திரிய தர்மத்தை முழுவதுமாக மேற்கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றான்! அரசரே நீர் அவனை இராஜ்ய தர்மத்தில் ஈடபடும்படிச் செய்வீராக. 297

### த்ருதராஷ்டிரர் கூறியது

நீர் எனக்கு உபதேசம் செய்வதைப் போலத்தான் எப்போதும் நிலை உள்ளது. அழகாக இருப்பவரே! நீங்கள் கூறுவதைப் போல் தான் எனது மனமும் உள்ளது. 298

எனது மனம் பாண்டவர்களின் விஷயத்தில் தீர்மானமாக இருந்தாலும் துரியோதனன் வந்த பின் மீண்டும் மாறி விடுகிறது. 299

எந்த உயிருக்கும் விதியை மிறுவது சாத்தியமில்லை. நான் விதி நிச்சயமாக நடந்தே தீரும் எனக் கருது கின்றேன். மனிதனுடைய முயற்சி பயனற்றது. 300

# அன்னை சம்பூரணியம்மாள் போற்றிப் பாமாலை

வண்ணமுறு புகழ்கந்த சாமி வள்ளல்
 மாசற்ற மாதேவி சம்பூ ரணமே!
விண்ணளவு புகழ்பரப்ப நம்பி தன்னை
 இவ்வுலகில் தோற்றுவித்த சீர்மிக்க அன்னை!
மண்ணுலக மாதவர்கள் மகிழ்வு சார
 வந்துவணங் கும்தவஸ்ரீ சதாசி வானந்தர்
புண்ணியசீர் பாதமடைந் துபொரு ளறிந்து
 புண்ணியப தமடைந்த னைபோற்றி! போற்றி!

நல்லறங்கள் பலபுரிந்து நலிந்தோரைத் தேற்றிதேற்றி
 நலமுடனே காத்தருளி நன்றான புண்ணியமிகு
இல்லறத ருமத்தையே முறையாக நடத்தியென்றும்
 நிலையான சாத்திரத்தை இன்புடனே கற்றிடவே
நல்லசற்கு ருசதாசி வானந்தர் தாளமடைந்து
 ஐயமற கற்றுநன்றாய் ஆனந்த நிலையடைந்தாய்
நல்லநின்ஞா னம்ஞால மெலாமென்றும் பரவுதம்மா!
 நன்றான நின்றாளென றும்போற்றி! போற்றி!

தன்னுயிர்போல் மன்னுயிரைக் கருதியே காலமெலாம்
 சலியாத மனத்துடனே துயர்நீக்கி யருளினாய்
மன்னர்கு லமாதரசி மதாலசா யென்றிடவே
 மாஞான மூட்டியேநன் மகனைத் தந் தாயே
பின்னரென்றும் நலம்தரும்நல் லறங்கள்பலசெய்திடவும்
 இனிதான குடும்பங்கள் பலப்பல தோன்றிட
பின்னனைய வழிவகுத்து நல்லருள் புரிந்திட்டாய்
 நின்றாளென் றும்போற்றி போற்றி போற்றியே!

ஞானியர் பலர்கூடும் நன்றான இன்னாளில்
ஞானசாத்தி ரத்தை நன்றாகப் பேசியே
ஊனமி லாமதிய டையவழி வகுத்தாயே!
உலகுய்ய ஏற்றமிகு நற்சுதனை ஈன்றளித்தாய்
ஞானகு ருசதாசி வானந்தர் தாளடைந்து
நன்றான ஞானியாகி நற்சமாதி யடைந்தாய்
ஞானவ ழிகாட்டும் நின்றாள் போற்றி!
நாவலர்கள் போற்றும் நின்தாள் போற்றி!

போற்றுகின்ற நின்ஞானம் புவியில் பரப்ப
புகழ்குரு சதாசிவானந் தர்தா ளடைந்து
ஏற்றமிக ஞானமெய்தி திடஞானி யானாய்
சீலமிகு சேயாய் சீடனாய் நின்ற
போற்றுதல்மி குருபக்த சிரோம ணியான
பூரணஞா னமுடைய முனிரா ஜர்தான்
ஆற்றுகின்ற ஞானதானத் தாலென் றென்றும்
அழியாப்பு கழ்படைத்தாய் நின்றாள் போற்றி!

மாதாம்பா சரஸ்வதி
ராஜராஜேஸ்வரி மஹிலா சமாஜம்
சேலம்

---

அன்னையில்ல ராஜனே அய்யாமுனி ராஜனே!
அன்புடன் நான் சொல்லுவதை அவசியம் கொஞ்சம்
கேளுங்கள் (அன்னை)

தொழில்

கஷ்டத்தை குறையுங்கள், களிப்புடனே வாழுங்கள்
கடமையின் வீரனே! எங்கள் துணைத்தலைவனே!

(அன்னை)

பாலன் கந்தசாமி நான் பணிவுடனே வேண்டுகின்றேன்
(மனப்) பாரத்தை குறையுங்கள் பரமானந்தம் அடையுங்கள்
(அன்னை)

## வாழ்த்துப்பாடல்

அம்மா உன் வீட்டினிலே – இருந்து
ஆட்சிதனை செலுத்துகின்றேன்
ஆவியாய் என் உடனிருந்து – உன்
அருளாசி தந்திடம்மா!

(அம்மா)

பள்ளியில் படிக்க வைத்தாய் – என்னை
பக்தியில் திளைக்க வைத்தாய்
நற்பணிகள், செய்ய வைத்தாய் – இன்று
நாடு போற்ற வாழ வைத்தாய்

(அம்மா)

கை கால்கள் விளங்காத
கண்பார்வை, தெரியாத
பாலர்களைப் பாதுகாத்து – இந்த
பாரில் பரிசை பெற வைத்தாய்

(அம்மா)

சீமையில் படிக்க வைத்தாய் – என்னை
சிறப்புடனே வாழ வைத்தாய் – இன்னும்
சில காலம் தங்காமல் – அம்மா!
சிவனடியை சேர்ந்து விட்டாய்

(அம்மா)

காண்பவர்கள் களிப்புறவே
களிப்புடன் நான் வாழ்ந்திடவே
பேத்தியாய் நீயும் வந்து
பிறந்திடுவாய் என் தாயே!

(அம்மா)

V.T.K./ராஜு, (எ) V.T. கந்தசாமி (நாமக்காரர்)

## பாடல் பெற்ற சிவத்தலங்கள் 274

சோழ நாடு 190, தொண்டை நாடு 32, நடுநாடு 22, கொங்குநாடு 7, வட நாடு 5, ஈழ நாடு 2, துளுவை நாடு 1, மலை நாடு 1, பாண்டிய நாடு 14, ஆக 274 இவற்றில் பாண்டிய நாடு 14, 1.திருப்புனவாசல், 2.திருவாடானை, 3.பிரான்மலை, 4.திருப்பத்தூர், 5. காளையார் கோவில், 6.இராமேஃவரம், 7.திருச்சுழி, 8.திருப்பூவணம், 9.மதுரை,. 10.திருஆப்பனூர், 11.திருப்பரங்குன்றம், 12.திருஏடகம், 13.குற்றாலம், 14.திருநெல்வேலி ஆகும்.

## நவக்கிரகங்களின் பிரதான ஸ்தலங்கள் –

1.சூரியன் – சூரியனார் கோவில், 2.சந்திரன் – திரு வாரூர், 3. செவ்வாய் – வைத்தீஸ்வரன் கோவில், 4.புதன் – திருவெண்காடு, 5. வியாழன் – ஆலங்குடி, 6.வெள்ளி – கஞ்சனூர், 7.சனி – திருநள்ளாறு, 8.இராகு – திரு நாகேஸ்வரம், 9.கேது – நாகநாதன் கோவில்.

தனிக்கோவில்கள் – சரஸ்வதிக்கு – கூத்தனூர், சூரியனுக்கு – சூரியனார் கோவில், பிரம்மனுக்கு – திருகண்டியூர், பைரவருக்கு – திருவலஞ்சுழி, தகட்டூர்.

## சத்த (ஏழு) விடங்கத்தலங்கள்

| ஸ்தலம் | விடங்கர் | நடனம் |
|---|---|---|
| 1. திருவாரூர் | வீதிவிடங்கர் | அஜபா நடனம் |
| 2. திருநள்ளாறு | நாகவிடங்கர் | உன்மத்த நடனம் |
| 3. திருநாகை | சுந்தரவிடங்கர் | பாராவாரதரங்க நடனம் |
| 4. திருக்காராவாசல் | ஆதிவிடங்கர் | குக்குட நடனம் |
| 5. திருக்குவளை | அவனிவிடங்கர் | பிருங்க நடனம் |
| 6. திருமறைக்காடு | புவனி விடங்கர் | அம்சபாத நடனம் |
| 7. திருவாய்ம்மூர் | நீலவிடங்கர் | கமல நடனம் |

## ஹிந்துக்களின் மாதக் கடமைகள்.

1. மாதமொருமுறை அருகே உள்ள ஞானிகள், துறவிகள் மடாதிபதிகளைக் குடும்பத்துடன் சந்தித்து மன ஆறுதல் பெறவும்.
2. வீட்டில் ஏதேனும் பஜனை, பூஜை நிகழ்ச்சிகளைச் சகஹிந்துக்களோடு இணைந்து நடத்தவும்.
3. புகழ்பெற்ற திருத்தலங்கள் அருகில் இருந்தால் சென்று தரிசித்துவரவும். இயன்ற அளவு தான தருமங்கள்செய்யவும்.
4. அருகிலுள்ள அனாதை இல்லம்/முதியோர் இல்லம் ஆகிய ஏதேனும் ஒரு தொண்டு நிறுவனத்திற்குச் சென்று இயன்ற உதவிகளைச் செய்யவும்.

## ஹிந்துக்களின் பொதுவான கடமைகள்.

1. கட்டாயமாக வீடுகளில் 'ஓம்' படம் மாட்டி வைக்கவும். 'ஓம்' என்பது பிரணவ மந்திரமாகும்.
2. ஹிந்து இயக்கங்களின் தினசரி, வார, மாத வெளியீடுகளில் சந்தாதாரராகச் சேர்வதன் மூலம் ஹிந்து தர்மத்திற்கு வலுவூட்டவும். முடிந்தால் நண்பர்களையும் சேர்க்கவும்.
3. ஹிந்து இயக்கங்களின் பிரசுரங்களைப் படித்து கருத்துக்களை எழுதி அனுப்பவும். அலட்சியமாக இருக்கவேண்டாம்.
4. ஏதேனும் ஒரு வகையில் அண்டை ஹிந்துக்களுடன் ஒரு குழுவாக இணைந்து தொண்டாற்றவும்.
5. ஹிந்து மதத்தைப்பற்றி குழந்தைகட்கு எளிமையாக எடுத்துக்கூறவும், ஹிந்து எனக்கூறுவதில் பெருமைகொள்ள அறிவுறுத்தவும்
6. வீட்டில் பகவத்கீதை, புராணங்கள், ஹிந்து இயக்க பிரசுரங்கள் முதலியவற்றை வாங்கிவைத்து குடும்பத்தோடு படிக்கவும்
7. ஹிந்து மதம் சம்பந்தமான சந்தேகங்கட்கு ஹிந்து இயக்கங்களை அணுகவும்.
8. ஹிந்து இயக்கப்பிரச்சாரகர்களை அழைத்து, அருகில் உள்ள ஹிந்துக்களோடு இணைந்து, கலந்து உரையாடவும்.
9. ஹிந்து தர்மத்திற்கு ஆதரவான அல்லது மாறுபட்ட கருத்துக்களை படித்தால், உடனே பத்திரிகைகட்கு உங்கள் கருத்துக்களைத் துணிந்து எழுதி அனுப்பவும்.
10. ''நான் ஒரு ஹிந்து : பாரதம் ஹிந்துக்களின் தாயகம்'' எனப் பெருமை கொள்ளவும்
11. ஆக இந்த நான்குவித கடமைகளை தினசரி ஒருமுறையாவது தவறாமல் அவசியம் படித்துவருவது மிகமுக்கிய கடமையாகும்.

***பலன்:*** இந்தக் கடமைகளை இயன்ற அளவில் பக்திசிரத்தையுடன் விடாமல் செய்து வருபவர்களுக்கு தெய்வானுகிரகமுண்டாம், இகபரபோக பாக்கியங்கள் அவசியம் உண்டாகும். மேலும் சமூகம் ஊர், நகரம், நாடு உலகம் யாவுமே அமைதி பெற்று இன்புற்றிருக்கும்.